உதாரணம் :

*4th Case*: *நாகருக்குப்பலி—Sacrifice offered to the gods.*

*1st Case*: இரப்பவர் என்பெறினுங் கொள்வர்—The beggars receive whatever may be given them ; for, இரப்பவருக்கு என்னகொடுத்தாலும் வாங்கிக்கொள்வர். *What-ever may be given to the beggars, they never refuse to take.*

*2nd Case*: அழுக்கா றுடையானைச் செய்யவ டவ்வையைக் காட்டி விடும்—சீதேவி would link together the envious and மூதேவி, as fit associates ; for, அழுக்காறுடையானைச் செய்யவ டவ்வைக்குக் காட்டிவிடும்—சீதேவி *will give up the envious to மூதேவி.*

*3rd Case*: நாகராற்பலி—The sacrifice (occasioned) by the gods; for, நாகருக்குப்பலி-*Sacrifice offered to the gods.*

*5th Case*: நாகரின் அன்புசெய்தான்—He showed the kindness (arising) from (a consideration of) the gods; for, நாகருக்கு அன்புசெய்தான்—*He showed kindness to the gods.*

*6th Case*: நாகரது பலி—The sacrifice of (=used to be offered to) the gods; for, நாகருக்குப்பலி—*The sacrifice offer-ed to the gods.*

*7th Case*: நாகர்கண் அன்புசெய்தான் -He showed love towards the gods ; for, நாகருக்கு அன்புசெய்தான்—*He showed love. to the gods.*

---

**Fifth Case.**—ஐந்தாம்வேற்றுமைப்பொருள்களுள் நீக்கப்பொருள் சிறுபான்மை இரண்டனுருபேற்கும், எல்லைப்பொருள் சிறுபான்மை நான்கனுருபேற்கும் வரும்.

உதாரணம் :

*2nd Case* : மதுரையை நீங்கினன்—He left Madura ; for, மதுரையின் நீங்கினன்—*He went away from Madura* (நீக்கப்பொருள்).

*4th Case*: மதுரைக்கு வடக்குச் சிதம்பரம்—Chithumbaram. ... north to Madura; for, மதுரையின் வடக்குச் சிதம்பரம்—*Chithumbaram is to the north of Madura.* (எல்லைப்பொருள்)

---

**Sixth Case**.—சம்பந்தப்பொருள் ஆறனுருபோடன்றிச் சிறுபான்மை நான்கனுருபு, ஐந்தனுருபு, ஏழனுருபுகளோடும் வரும்.

உதாரணம் :

*6th Case*: சாத்தனதுகை—*The hand of Satthen.*

*4th Case*: சாத்தனுக்குமகன்—Son to Satthen; for, சாத்தனுடையமகன்—*Son of Satthen.*

*5th Case*: மரத்தின் நீங்கின கொம்பு—The branch that is away from the tree; for, மரத்தினுடைய நீங்கின கொம்பு—*The Branch of the tree that is far removed from it.*

*7th Case*: உயிரின்கண் உணர்வு—Sensation in life; for, உயிரினது உணர்வு—*Sensation of life.*

---

**Seventh Case**.—இடப்பொருள் ஏழனுருபோடன்றிச் சிறுபான்மை முதலாயுருபு, இரண்டனுருபு, நான்கன் உருபுகளோடும் வரும்.

உதாரணம் :

*7th Case*: தூணின்கட் சார்ந்தான்—*He rested on the pillar.*

*1st Case*: தூண்போதிகை தொட்டது—The pillar reached the prop; for, தூணின்கண் போதிகை தொட்டது—*The prop rested on the pillar.*

*2nd* பைாச: தூணைச்சார்ந்தான்—He rested the pillar; for, தூணின்கட் சார்ந்தான்—*He rested on the pillar.*

*4th Case*: *காலைக்கு வருவான்—He will come to the morning; for, காலையில் வருவான்—*He will come of a morning.*

---

* "காலை" is from "கால்"—meaning "காலம்"—time. A day is divided, both for ceremonial ablutions in the Hindu temple-worship and by the Pentavi-predictors (பஞ்சபட்சி சாஸ்திரிகள்), into six parts; thus "காலைக்குவருவான்" may mean also "that he will come opportunely" or in a proper time.

N.B.—பொருள் மயக்கத்தை வேற்றுமை உருபுப்பொருள் மயக்கம் என்று கொள்க.

---

An elliptical use of the case-terminations tend to an ambiguity in meaning ranging from two to seven modes of interpretation.

வேற்றுமையுருபுகள் தொக்குநின்றவழி பொருள்களினாலே மயங்குந் தன்மையையுடைய தொடர்மொழிகள் இரண்டுமுதல் ஏழிறகிய பொருள்களால் மயங்கும்; உதாரணம்:—

"தெய்வவணக்கம்" may mean :—

1. தெய்வத்தை வணங்குகிற வணக்கம் (2nd Case)—The worship wherewith we worship God.
2. தெய்வத்துக்கு வணக்கம் (4th Case)—The worship due to God.

"நீர்மோர்" may mean :—

1. நீரோடு கூடிய மோர் (3rd Case)—The மோர் mixed with நீர்.
2. நீரையுடைய மோர் (6th Case)—The மோர் which has நீர்.
3. நீரும்மோரும் (உம்மைத்தொகை)—நீர் and மோர்.

"சொல்லிலக்கணம்" may mean :—

1. சொல்லினது இலக்கணம் சொன்னநூல் (1st Case)—The work which treats of the இலக்கணம் of the சொல்.
2. சொற்கிலக்கணம் (4th Case)—இலக்கணம் to the சொல்.
3. சொல்லின திலக்கணம் (6th Case)—இலக்கணம் of the சொல்.
4. சொல்லின்கண் இலக்கணம் (7th Case)—இலக்கணம் contained in the சொல.

"பொன்மணி" may mean :—

1. பொன்னாலாகிய மணி (3rd Case)—The மணி made of பொன்,

---

மாலைக்கு, அந்திக்கு, சந்திக்கு, பகலைக்கு, இன்றைக்கு, நாளைக்கு, ஊருக்கு, வீட்டிற்கு,—வருவான். In these words 'கு' the fourth case termination expresses the idea of the *seventh case*; thus, மாலைக்கு வருவான் must not be rendered according to the form, " He will come *to* the evening," but according to the idea மாலை நேரத்தில் வருவான், *He will come in the evening*; the former is in the fourth case and the latter in the seventh and so with the others.

2. பொன்னோடுசேர்ந்த மணி (3rd Case)—The மணி mixed with பொன்.
3. பொன்னின்கண் மணி (7th Case)—The மணி in பொன்.
4. பொன்னலாகிய மணி (பண்பு)—The மணி which is பொன்.
5. பொன்னும் மணியும் (உம்மைத்தொகை)—பொன் and மணி.

"மரவேலி" may mean :—

1. மரத்தைக் காக்கிற வேலி (2nd Case)—The வேலி which protects the மரம்.
2. மரத்தாலாகிய வேலி (3rd Case)—The வேலி made of மரம்.
3. மரத்துக்கு வேலி (4th Case)—The வேலி for the மரம்.
4. மரத்தினது வேலி (6th Case)—The வேலி of the மரம்.
5. மரத்தின்புறத்து வேலி (7th Case)—The வேலி by the side of the மரம்.
6. மரமாகிய வேலி (பண்பு)—The வேலி which is மரம்.

"சொற்பொருள்" may mean :—

1. * சொல்லானதுபொருள் (1st Case)—The பொருள் is சொல்.
2. † சொல்லாலறியப்படும் பொருள் (3rd Case)—The பொருள் conveyed by the சொல்.
3. சொல்லுக்குப்பொருள் (4th Case)—The பொருள் for the சொல்.
4. சொல்லினது பொருள் (6th Case)—The பொருள் of the சொல்.
5. சொல்லின்கட் பொருள் (7th Case)—The பொருள் in the சொல்.
6. சொல்லாகிய பொருள் (பண்பு)—The பொருள் which is சொல்.
7. சொல்லும் பொருளும் (உம்மைத்தொகை)-The சொல் and பொருள்.

---

* "சொல்லானது பொருள்" என்றது தொகாநிலைப் பொருளாகிய எழுவாய்.

† "சொல்லால் அறியப்படும்பொருள்," "சொல்லின் அறியப்படும்பொருள்" என மூன்றுவதனோடு ஐந்தாவதும் விரிப்பாருமுளர். அவை யிரண்டிற்கும் எதுப்பொருள் ஒன்றே யாதலின் அது வேற்றுப்பொருளால் மயங்கியதன்றென்க.

## வினைச்சொல்—Verb.

**VERBS IN TAMIL WITH THEIR EQUIVALENTS IN ENGLISH.**

1. தன்வினை (1): ஓடுகிறான்—He runs; படிக்கிறான்—He reads.
2. பிறவினை (2): மாட்டை ஓட்டுகிறான்—He drives the bullock (or he *causes* the bullock to *run*). துரைசாமியைப் படிப்பிக்கிறான்.—He teaches Doorasawmy (or he *causes* Doorasawmy *to read*).
3. செய்வினை—ஓடுகிறான், படிக்கிறான்; Active Verb (or Voice)—He *runs*, He *reads*.
4. செயப்பாட்டு வினை—அடிபட்டான்; Passive Verb (or Voice)—He *was beaten*.
5. செயப்படுபொருள் குன்றியவினை—ஓடுகிறான்; Intransitive Verb —He *runs*.
6. செயப்படுபொருள் குன்றாவினை—பாடத்தைப் படிக்கிறான்; Transitive Verb—He *reads* (his) lesson.
7. இறந்தகால வினையெச்சம்—படித்து; Compound Perfect Participle—*Having learned*.
8. நிகழ்காலவினையெச்சம் or முக்காலத்துக்கும் பொதுவான வினையெச்சம்—வாசிக்கக் கற்பித்தேன், பார்க்கவருகிறான்; Verb in the Infinitive Mood or Gerund—I taught (him) *to read*. (He) comes *to see*.
9. எதிர்காலவினையெச்சம்—படித்தால் சமர்த்தனாவான்; Verb in the Subjunctive Mood— *if* (he) *reads* he will become clever.

---

* (1) தன்-வினை (=own—action) refers to an action of an agent where the action is of the agent himself; Ex. திரும்பு—turn one's self.

(2) பிற-வினை (= another-action or Causal Verb) refers to an action caused by an agent but done by another ; Ex. திருப்பு—turn another, cause to turn.

10. இறந்தகாலப் பெயரெச்சம்—படித்த மனிதன்; Perfect Participial Adjective—*Learned* man.
11. நிகழ்காலப் பெயரெச்சம்—ஓடுகிற குதிரை; Imperfect Participial Adjective—*Running* horse or a horse that runs.
12. எதிர்காலப் பெயரெச்சம்—ஓடுங்குதிரை; Imperfect Participial Adjective—*running* horse, or a horse that would run well.
13. வினைமுற்று—படிக்கிறான்; Finite Verb—He reads.
14. தன்மை வினைமுற்று—படிக்கிறேன்; Verb, Indicative Mood, First Person—I read.
15. முன்னிலை வினைமுற்று—படிக்கிறாய்; Verb, Indicative Mood, Second Person—You read.
16. படர்க்கை வினைமுற்று—படிக்கிறான்; Verb, Indicative Mood, Third Person—He reads.
17. ஏவல் வினைமுற்று—(நீ) படி; Verb, Imperative Mood, Second Person—*Read* (you or thou).
18. வியங்கோள் வினைமுற்று (நீ சுகமாய்) இருப்பாயாக; Verb in the Optative Mood—*May* you *be* happy.
19. விதிவினை அல்லது உடன்பாட்டுவினை—பார்த்தேன்; Affirmative Verb—I saw.
20. மறைவினை அல்லது எதிர்மறைவினை—(நான்) பார்க்கவில்லை, Negative Verb—(I) *did not see*.
21. முதனிலை or பகுதி—Root.
22. விகுதி—Termination.
23. இறந்தகாலம்—Past Tense. நிகழ்காலம்—Present Tense. எதிர் காலம்—Future Tense.
24. குறிப்புவினை : Any Verb, or any word used as a predicate, which does not denote any tense in particular but is common to the three tenses.

25. Some words are always குறிப்புவினை, such as: உண்டு, வேணும், இல்லை, அல்ல, இன்று, அன்று, &c.

26. The predicate in a sentence, formed by the auxiliaries *may* or *might*, *can* or *could*, and *ought*, *must* or *should*, when rendered into Tamil is always குறிப்புவினை; Ex. I *may read* or I *might read*—நான் படிக்கலாம்; I *can read* or I *could read*—நான் படிக்க

கூடும்: I *ought to read*, I *must read* or I *should read*—நான் படிக்கவேண்டும்.

27. The predicate in a sentence, formed by the copula (is, are, &c.) and (1) an Adjective, (2) a Noun, or (3) an Adjective and a Noun together, when rendered into Tamil is always குறிப்பு வினை. (*It is also termed* பெயர்ப்பயனிலை). Ex. (1). That is good—*அது நல்லது.* (2). He is a merchant—*அவன் வர்த்தகன்.* He is Raman—*அவன் இராமன்.* (3). He is a wise man—*அவன் ஞானவான்.*

N.B.—*For the rules for these verbs, refer to Grammar.*

---

## இடைச்சொல்.

*வேற்றுமையுருபுகள், விகுதியுருபுகள், இடைநிலையுருபுகள், சாரியைகள், வினாவெழுத்துகள், சுட்டெழுத்துகள், உவமைச்சொற்கள், தத்தம் பொருளையுணர்த்தியசொற்கள், இசைநிறைக்கிறசொற்கள், அசைநிறைக்கிறசொற்கள், குறிப்பிடைச்சொற்கள் ஆக இடைச்சொற்கள் பதினொரு வகையாம்.*

1. வேற்றுமையுருபுகள் (*பெயரியலிற் காண்க*)
2. விகுதியுருபுகள் (*பதவியலிற் காண்க*)
3. இடைநிலையுருபுகள் (*பதவியலிற் காண்க*)
4. சாரியைகள் (*பதவியலிற் காண்க*)
5. வினாவெழுத்துகள் (*எழுத்தியலிற் காண்க*)
6. சுட்டெழுத்துகள் (*எழுத்தியலிற் காண்க*)
7. உவமைச்சொற்கள் :—*போல, புரைய, ஒப்ப, உறழ, மான, கடுப்ப, இயைய, ஏய்ப்ப, நேர, நிகர, அன்ன, இன்ன, பொருவ, ஏற்ப, அனைய, இகல, எதிர, சிவண, மலைய, ஆங்கு முதலிய இருபதும் உவமைச் சொற்களாம்.*
8. தத்தம் பொருளையுணர்த்திய இடைச்சொற்கள்:—ஏ, ஓ, உம், என, என்று, தில், மன், மற்று, கொல், ஒடு, தெய்ய, அந்தில், ஆங்கு, அம்ம, மா, கொள்ளா, தான், பின், முன், *முதலிய பத்தொன்பதுந் தத்தம் பொருளையுணர்த்திய இடைச்சொற்களாம்.* (*இடையியலிற் காண்க*)
9. முன்னிலையிடத்து வருகிற அசைச்சொற்கள்:—*மியா, இக, மோ, மதி, அத்தை, இத்தை, வாழிய, மாள, ஈ, யாழ முதலிய பத்தும் முன்னிலையிடத்து வருகிற அசைச்சொற்களாம்.* (*இடையியலிற் காண்க*)

10. எல்லாவிடத்தும் வருகிற அசைச்சொற்கள்:—யா, கா, பிற, பிறக்கு, அரோ, போ, மாது, இகும், சின், குரை, ஓரும், போலும், இருந்து, இட்டு, அன்று, ஆம், தாம், தான், கின்று, நின்று, ஆகிய இப்பதினெட்டும் எல்லாவிடத்தும் வரும் அசைச்சொற்களாம். (இடையியலிற் காண்க.)

11. குறிப்பு இடைச்சொற்கள்:—

(a) ஆஅ, ஒஒ, அந்தோ, ஐயோ, அன்னோ, அச்சோ முதலிய ஆறும இரக்கத்தைக் குறிக்கும் இடைச்சொற்கள். (இடையியலிற் காண்க)

(b) கூ, கூகூ, ஐயோ, ஐயையோ முதலிய நான்கும், அச்சத்தைக் குறிக்கும் சொற்கள். (இடையியலிற் காண்க)

(c) வள, சீ முதலிய இரண்டும இகழ்ச்சியைக் குறிக்குஞ் சொற்கள். (இடையியலிற் காண்க)

(d) ஓகோ, ஒஒ, ஆகா, அம்மா முதலிய நான்கும் அதிசயத்தைக் காட்டுஞ் சொற்கள். (இடையியலிற் காண்க)

---

## உரிச்சொல்.

உரிச்சொல் குறிப்பு, பண்பு, இசை யென மூவகைப்படும்.

1. குறிப்பு உரிச்சொற்கள்:—சால, உறு, தவ, நனி, கூர், கழி என்னும் ஆறும் "மிகுதி" என்னுங் குறிப்பை யுணர்த்துவனவாம்.

2. பண்புரிச்சொற்கள்:—"கடி" என்பது காப்பு, கூர்மை, நாற்றம், விளக்கம், அச்சம், சிறப்பு, விரைவு, மிகுதி, புதுமை, ஆர்த்தல், வரைவு, மன்றல், கரிப்பு என்னும் பதின்மூன்று குணங்களை யுணர்த்துவதாம்.

3. இசையுரிச்சொற்கள்:—

(a) முழக்கு, இரட்டு, ஒலி, கலி, இசை, துவை, பிளிறு, இரை, இரங்கு, அழுங்கு, இயம்பல், இமிழ், குளிறு, அதிர், குரை, கனை, சிலை, சும்மை, கௌவை, கம்பலை, அரவம், ஆர்ப்பு என்னும், இருபத்திரண்டும் "ஓசை" என்னும் இசையை யுணர்த்துவனவாம்.

(b) மாறறம், நுவற்சி, செப்பு, உரை, கரை, நொடி, இசை, கூற்று, புகறல், மொழி, கிளவி, விளம்பு, அறை, பாட்டு, பகர்ச்சி, இயம்பல் என்னும் பதினாறும் "சொல்" என்னும் இசையை யுணர்த்துவனவாம்.



## METHOD OF PARSING NOUNS.

## பெயர்ச்சொல்லுக்கு இலக்கணங் கூறும் விதம்.

1. முதல் வேற்றுமையிலுள்ள ஒரு பெயர்ச்சொல்லுக்கு இலக்கணங் கூறும் விதம்:—இன்ன திணை, பால், இடம், பெயர்ச்சொல் என்று கூறி, இன்ன பயனிலைக்கு எழுவாயாக நிற்கின்றதென்று சொல்லி முடிக்கவேண்டும்.

2. எட்டாம் வேற்றுமையிலுள்ள ஒரு பெயர்ச்சொல்லுக்கு இலக்கணங் கூறும் விதம்:—இன்ன திணை, பால், இடம், பெயர்ச்சொல், வேற்றுமை யென்று கூறி, இன்ன வினையைக்கொண்டு முடிகிறதென்று சொல்லி முடிக்கவேண்டும்.

3. முதல் வேற்றுமை[redacted]தவிர, மற்றெந்த வேற்றுமையிலாவதுள்ள ஒரு பெயர்ச்சொல்லுக்கு இலக்கணங்கூறும்விதம்:— வேற்றுமையும் அதற்குரிய பொருளையுங் கூறியபின்; இன்ன திணை, பால், இடம், பெயர்ச்சொல் என்றும், இன்ன சொல்லைக்கொண்டு முடிகிறதென்றுஞ் சொல்லி, முடிக்கவேண்டும்.

N.B.—இரண்டாம் வேற்றுமையிலுள்ள ஒருபெயர்ச்சொல்லுக்கு இலக்கணங் கூறும்போது மாத்திரம், பெயர்ச்சொல்லுக்குரிய இலக்கணங்களைக் கூறினபின், இன்ன வினைச்சொல்லுக்குச் "செயப்படுபொருளாக" வந்ததென்று சொல்லி முடிக்கவேண்டும்.



## METHOD OF PARSING VERBS.

## வினைச்சொல்லுக்கு இலக்கணங் கூறும் விதம்.

4. வினைச்சொல்: தெரிநிலைவினை, குறிப்புவினை யென வினைச்சொல் இருவகைப்படும்.

5. தெரிநிலை வினைக்கு இலக்கணங்கூறும்விதம்:—செயப்படுபொருள் குன்றியவினையா, குன்றாவினையாவென்றும்; இறந்தகாலமா, நிகழ்காலமா,

எதிர்காலமாவென்றும்; உடன்பாடா எதிர்மறையாவென்றும்; செய்வினையா, செய்ப்பாட்டுவினையாவென்றும்; தன்வினையா, பிறவினையாவென்றும்; வினைமுற்றா, வினையெச்சமா, பெயரெச்சமா, தொழிற்பெயராவென்றுஞ் சொல்லி, எதைக்கொண்டு முடிகிறதென்று கூறவேண்டும்.

N.B.—வினைமுற்றாயிருந்தால்,—அவ்வினைமுற்றின் எழுவாயின் "திணை. பால், இடங்களை" முதலில் எடுத்துக்காட்டி, பிற்பாடு வினைச்சொல்லுக்குரிய இலட்சணங்களைக் கூறி, இன்ன "எழுவாய்க்குப் பயனிலையாக" வந்ததென்று சொல்லி முடிக்கவேண்டும்.

குறிப்புவினைக்குஇலக்கணங் கூறும் விதம்: உடன்பாடா, எதிர்மறையாவென்றும்; பொதுக்குறிப்பா, சிறப்புக்குறிப்பா, வினாக்குறிப்பாவென்றும்; வினைமுற்றா, வினையெச்சமா, பெயரெச்சமா, தொழிற்பெயராவென்றுஞ் சொல்லி, எதைக்கொண்டு முடிகிறதென்று கூறவேண்டும்.

N.B.—(a) குறிப்பு வினைமுற்றாயிருந்தால்,—குறிப்பு வினைக்குரிய இலக்ஷணங்களை மாத்திரங் கூறி, இன்ன எழுவாய்க்குப் "பயனிலையாக" வந்ததென்று சொல்லி முடிக்கவேண்டும்.

(b) குறிப்புப்பயனிலை "பெயர்ச்சொல்லாயிருந்தால்"—பெயர்ச்சொல்லுக்குரிய இலக்ஷணங்களையெல்லாங் கூறி, இன்ன எழுவாய்க்குப் "பயனிலைய [redacted] வேண்டும்

7. தொழிற்பெயருக்கு இலக்கணங் கூறும் விதம்: பெயர்ச்சொல்லுக்குரிய வேற்றுமையையும், பொருளையும்; வினைச்சொல்லுக்குரிய இலக்ஷணங்களையுங்கூறி, பெயர்ச்சொல்லை முடிக்கும் வண்ணம் முடிக்கவேண்டும்.

## METHOD OF PARSING PARTICIPLES.

## இடைச்சொல்லுக்கு இலக்கணங் கூறும் விதம்.

8. இடைச்சொல்லுக்குத் தனியே இலக்கணங் கூற முடியாது. ஏனென்றால்: அதுபெயர்ச்சொல்லையாவது வினைச்சொல்லையாவது அடுத்து வருமேயொழிய, தனியே வரமாட்டாது. ஆகையால், அது எந்தச்சொல்லையடுத்து வருகிறதோ, அந்தச் சொல்லுக்குரிய இலக்கணத்தைக் கூறி, இன்ன பொருளைக் குறிக்கும் இன்ன இடைச்சொல்லோடு கூடி, அனைத்தும் ஒரு சொல்லாக நின்று, இன்ன சொல்லைக்கொண்டு முடிகிறதென்று சொல்லி முடிக்கவேண்டும்.

# METHOD OF PARSING ADJECTIVE OR ADVERB.

## உரிச்சொல்லுக்கு இலக்கணங் கூறும் விதம்.

9. உரிச்சொல்லானது பெயருரிச்சொல் வினையுரிச்சொல் என இரு வகைப்படும். ஆகையால், இன்ன பொருளைக் குறிக்கும் இன்ன உரிச்சொல்லென்று மாத்திரங் கூறி, இன்ன பெயரை அல்லது இன்ன வினையைத் தழுவி நிற்கின்றதென்று சொல்லி, முடிக்கவேண்டும்.

---

## SYNTACTICAL PARSING.

## சொன்முடிபிலக்கணத்திற் குதாரணம்:

N.B.—சொல்லிலக்கணம் இதனுளடக்கம்—Etymological Parsing is included in this.

(I.) இலண்டனி லரசாளுகின்ற ஜயலக்ஷ்மியாகிய சக்கிரவர்த்தினி யொருவருக்குமாத்திரஞ் சிறந்த மரியாதையுண்டு.

1. இலண்டனில் என்பது—இடப்பிறிதின் கிழமைப்பொருளில் வந்த, ஏழாம் வேற்றுமை யுருபேற்று நின்ற, அஃறிணை ஒன்றன்பால் படர்க்கைக் காரண இடப்பெயர்—ஆளுகின்ற என்னும் பெயரெச்ச வினையைக்கொண்டு முடிந்தது.

2. அரசு என்பது—ஆக்கப்படுபொருளில் வந்த, இரண்டாம் வேற்றுமைத் தொகையாகி நின்ற பண்புப்பெயர்—ஆளுகின்ற என்னும் பெயரெச்ச வினைக்குச் செயப்படுபொருளாக நின்றது.

3. ஆளுகின்ற என்பது—தெரிநிலை செயப்படுபொருள் குன்றாத, நிகழ் கால உடன்பாட்டுத் தன்வினைப் பெயரெச்சம்—சக்கிரவர்த்தினி யென்னும் பெயரைக்கொண்டு முடிந்தது.

4. ஜயலக்ஷ்மியாகிய என்பது—உயர்திணைப் பெண்பால் படர்க்கை உவமை ஆகுபெயர்—ஆகிய என்னும் பண்புருபை யேற்றுச் சக்கிரவர்த்தினி என்னும் பெயரைக்கொண்டு முடிந்தது.

5. சக்கிரவர்த்தினி என்பது—உயர்திணைப்பெண்பால் படர்க்கை [illegible] பொருள் பெயர்—இருபெயரொட்டுப்பண்புத் தொகையாகி, ஒருவருக்கு என்னும் பெயர்ச்சொல்லோடு ஒத்து நின்றது.

[illegible] என்பது—[illegible] பொருளில் வந்த [illegible] வேற்றுமை [illegible] என்னும் [illegible] விருதியைப் [illegible] படர்க்கை [illegible]

பெயர்—பிரிநிலையைக் குறிக்கும் **மாத்திரம்** என்னும் இடைச்சொல்லோடு கூடி, அனைத்தும் ஒரு சொல்லாக நின்று, **உண்டு** என்னும் வினைமுற்றைக் கொண்டு முடிந்தது.

7. **சிறந்த** என்பது—தெரிநிலை செயப்படுபொருள் குன்றிய, இறந்த கால உடன்பாட்டுத் தன்வினைப் பெயரெச்சம்—**மரியாதை** யென்னும் பெயரைக்கொண்டு முடிந்தது.

8. **மரியாதை** என்பது—பால் பகா அஃறிணைப் பண்புப்பெயர்—**உண்டு** என்னும் வினைமுற்றுக்கு எழுவாயாக நின்றது.

9. **உண்டு** என்பது—உடன்பாட்டுப் பொதுக்குறிப்பு வினைமுற்று—**மரியாதை** என்னும் எழுவாய்க்குப் பயனிலையாக வந்தது.



(II) வீட்டிலுள்ளவர்கள் கண்டு வியந்துகொள்ளும்பொருட்டு மதிலேறி நிற்பது மிறுமாப்புட னரச நடை நடப்பதும் மயிலுக்கானந்தமாயிருந்தன.

1. **வீட்டில்** என்பது—பொருள் பிறிதின்கிழமைப்பொருளில் வந்த, ஏழாம் வேற்றுமை யுருபேற்று நின்ற, அஃறிணை யொன்றன்பால் படர்க்கைப் பொருள் பெயர்—**உள்ளவர்கள்** என்னுஞ் சொல்லைக்கொண்டு முடிந்தது.

2. **உள்ளவர்கள்** என்பது உயர்திணை பலர்பால் படர்க்கை உடன்பாட்டுச் சிறப்புக்குறிப்பு வினையாலணையும் பெயர்—**கண்டு** என்னும்வினைக்கு எழுவாயாக நின்றது.

3. **கண்டு** என்பது—தெரிநிலை செயப்படுபொருள் குன்றாத, இறந்த கால உடன்பாட்டுத் தன்வினை வினையெச்சம்—**வியந்துகொள்ளும்** என்னும் வினையைக்கொண்டு முடிந்தது.

4. **வியந்துகொள்ளும்** என்பது—தெரிநிலை செயப்படுபொருள் குன்றாத, எதிர்கால உடன்பாட்டுத் தன்வினைப் பெயரெச்சம்—**பொருட்டு** என்னும் பெயரைக்கொண்டு முடிந்தது.

5 **பொருட்டு** என்பது—பொருட்டுப் பொருளில் வந்த, **ஆக** என்னும் நான்காம் வேற்றுமை யுருபு தொகையாகி நின்ற பண்புப்பெயர்—**ஏறி** என்னும் வினையைக்கொண்டு முடிந்தது.

குறிப்பு :

(a) "பொருட்டு" பெயர்ச்சொல்லைத் தொடர்ந்து வரும்போது "நான்காம் வேற்றுமையின் சொல்லுருபாம்". (உ-ம்) அவன் பொருட்டு. இங்கே "பொருட்டு" நான்காம் வேற்றுமையின் சொல்லுருபு. (பொருட்டு= or "நிமித்தம்").

(b) "பொருட்டு" வினைச்சொல்லைத் தொடர்ந்து வரும்போது "பெயர்ச்சொல்லாம்" (உ-ம்) அவன் வரும்பொருட்டு. இங்கே "பொருட்டு", பண்புப் பெயர்ச்சொல். (பொருட்டு="நிமித்தம்").

(c) "பொருட்டு" குறிப்பு முற்றாயிருந்தால், "பொருளையுடையது" என்று அருத்தங் கொடுக்கும். (உ-ம்) அது பொருட்டு="அது பொருளையுடையது".

6. **மதில்.** என்பது—பொருள் பிறிதின் கிழமைப்பொருளில் வந்த, ஏழாம் வேற்றுமை உருபு தொகையாகி நின்ற, பால் பகா அஃறிணைப் படர்க்கைப் பொருள் பெயர்—(ஈண்டு ஒன்றன்பால்)—**ஏறி** என்னும் வினையைக் கொண்டு முடிந்தது.

7. **ஏறி** என்பது—தெரிநிலை செயப்படுபொருள் குன்றிய, இறந்தகால உடன்பாட்டுத் தன்வினை வினையெச்சம்—**நிற்பதும்** என்னும் தொழிற்பெயரைக்கொண்டு முடிந்தது.

8. **நிற்பதும்** என்பது—எண்ணுப் பொருளைத்தரும் **உம்** என்னும் இடைச்சொல்லை யேற்றுவந்த, தெரிநிலை செயப்படுபொருள் குன்றிய, எதிர்கால உடன்பாட்டுத் தன்வினைத் தொழிற்பெயர்—**இருந்தன** என்னும் வினைமுற்றுக்கு எழுவாயாக நின்றது.

9. **இறுமாப்புடன்** என்பது—விசேடணப் பொருளில் வந்த, மூன்றும் வேற்றுமை யுருபேற்று நின்ற, தன்வினைத் தொழிற்பெயர்—**நடப்பதும்** என்னும் பெயரைக்கொண்டு முடிந்தது. (விசேஷணம் or விசேடணம்=அடைமொழி).

10. **அரசன்** என்பது—பண்புத்தற்கிழமைப்பொருளில் வந்த, (**அது** என்னும் உருபு தொக்க) ஆறும் வேற்றுமைத்தொகையாகி நின்ற, உயர்திணை ஆண்பாற் படர்க்கைப் பண்படியாகப் பிறந்த பொருள் பெயர்—**நடை** என்னும் பெயரைத்தழுவி நின்றது,

11. **நடை** என்பது—காலங்காட்டாத தன்வினைத் தொழிற்பெயர்—அடையடுப்படு பொருளில் வந்த இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன் தொக்கத்தொகையாகி, **நடப்பதும்** என்னுஞ் சொல்லைக்கொண்டு முடிந்தது.

12. **நடப்பதும்** என்பது—(எண்ணுப் பொருளைத்தரும் **உம்** என்னும் இடைச்சொல்லை யேற்றுவந்த) தெரிநிலை செயப்படுபொருள் குன்றிய, எதிர்கால உடன்பாட்டுத் தன்வினைத் தொழிற்பெயர்—**இருந்தன** என்னும் வினைமுற்றுக்கு எழுவாயாக நின்றது.

13. **மயிலுக்கு** என்பது—தகுதிப்பொருளில் வந்த, நான்காம் வேற்றுமையுருபேற்று நின்ற, பால்பகா அஃறிணைப்படர்க்கை இடுகுறிபொருள்பெயர்—(ஈண்டு ஒன்றன்பால்) **ஆனந்தமாய்** என்னுஞ் சொல்லைக்கொண்டு முடிந்தது.

14. **ஆனந்தமாய்** என்பது—தெரிநிலை செயப்படுபொருள் குன்றிய, இறந்தகால (செயவென்னும் வாய்பாடு திரிந்த செய்தென்னும்) உடன்பாட்டுத் தன்வினை வினையெச்சம்—**இருந்தன** என்னும் வினைமுற்றைக்கொண்டு முடிந்தது.

குறிப்பு: "ஆ" என்னும் வினையடி "ஆனந்தம்" என்னும் பண்புப்பெயருடன் புணர்ந்து, அதனை வினைப்படுத்தியது.

15. **இருந்தன** என்பது—அஃறிணைப் பலவின்பால் படர்க்கைத் தெரிநிலை செயப்படுபொருள் குன்றிய, இறந்தகால உடன்பாட்டுத் தன்வினை வினைமுற்று—**நிற்பதும் நடப்பதும்** என்னும் எழுவாய்களுக்குப் பயனிலையாக வந்தது.

(III.) மைசூரரசனை நோக்கி, நீர் வாழ்க வென்றொரு பெரியவர் கூறினார்.

1. **மைசூர்** என்பது—தகுதிப்பொருளில் வந்த, நான்காம் வேற்றுமையுருபு தொகையாகி நின்ற, அஃறிணை யொன்றன்பால் படர்க்கைக் காரண இடப்பெயர்—**அரசனை** யென்னுஞ் சொல்லைக்கொண்டு முடிந்தது.

2. **அரசனை** என்பது—வாழ்த்துப் பொருளில் வந்த, இரண்டாம் வேற்றுமை யுருபேற்று நின்ற, உயர்திணை ஆண்பாற் படர்க்கைப் பண்படியாகப் பிறந்த பொருள் பெயர்—**நோக்கி** என்னும் வினைக்குச் செயப்படுபொருளாக நின்றது.

3. **நோக்கி** என்பது—தெரிநிலை செயப்படுபொருள் குன்றாத, இறந்தகால உடன்பாட்டுத் தன்வினை வினையெச்சம்—**கூறினார்** என்னும் வினைமுற்றைக்கொண்டு முடிந்தது.

4. **நீர்** என்பது—திணை பால் பொதுவாகிய முன்னிலை பன்மைப்பெயர் (ஈண்டு அரசனைக் குறிக்கின்றது)—**வாழ்க** என்னும் வினைமுற்றுக்கு எழுவாயாக நின்றது.

5. **வாழ்க** என்பது—தெரிநிலை செயப்படுபொருள் குன்றிய, எதிர்கால உடன்பாட்டுப் பொதுவியங்கோள் தன்வினை வினைமுற்று—**நீர்** என்னும் எழுவாய்க்குப் பயனிலையாக வந்தது.

6. **என்று** என்பது—**வாழ்க** என்னும் வினையை யடுத்து வந்த இடைச்சொல்—**கூறினார்** என்னும் வினைமுற்றைத் தழுவி நின்றது.

7. **ஒரு** என்பது—ஒன்று என்பதின் விகாரமொழியாகிய எண்ணுப்பெயர் (இதுபண்பினுளடங்கும்)—**பெரியவர்** என்னும் பெயரை விசேடித்து நின்றது.

8. **பெரியவர்** என்பது—உயர்திணை ஆண்பாற் படர்க்கைப் பண்படியாகப் பிறந்த பொருள்பெயர்—**கூறினார்** என்னும் வினைமுற்றுக்கு எழுவாயாக நின்றது.

9. **கூறினர்** என்பது—உயர்திணை ஆண்பாற் படர்க்கைத் தெரிநிலை செயப்படுபொருள் குன்றாத, இறந்தகால உடன்பாட்டுத் தன்வினை வினைமுற்று—**பெரியவர்** என்னும் எழுவாய்க்குப் பயனிலையாக வந்தது.

அப்பியாசம் :

*N. B.*—11-ம் பக்கத்தில், வாக்கியாங்கச் சேதன விலக்கணங் கூறுவதற்காகக் கொடுக்கப்பட்டிருக்கும் 24வாக்கியங்களுக்குஞ் சொன்முடி பிலக்கணங் கூறுக.

---

## புணர்ச்சியிலக்கணக் குறிப்பு.

(1) புணர்ச்சி யென்பது நிலைமொழியும் வருமொழியும் ஒன்றோடொன்று புணருவது. அது **பொருட்புணர்ச்சி பதப்புணர்ச்சி** யென இருவகையாம்.

குறிப்பு.

(*a*) புணர்ச்சியில் உயிர்மெய்யீற்று மொழியை "உயிரீற்றுமொழி" என்றும், உயிர் மெய்ம்முதன் மொழியை "மெய்ம்முதன்மொழி" என்றுங் கொள்க.

(*b*) மெய்ம்முதன் மெய்யீறு, மெய்ம்முதல் உயிரீறு, உயிர்முதல் உயிரீறு, உயிர் முதன் மெய்யீறு ஆகிய நான்குவகை மொழிகள் நிலைமொழி வருமொழியாக நின்று ஒன்றோடொன்று புணரும் என்று அறிக. "உதாரணம்":—கடவுள் ஆளுகிறார்—மெய்யீற்று மொழிமுன் உயிர்முதன் மொழிவந்து புணர்ந்தது. அவர் வருவார்—மெய்யீற்று மொழி முன் மெய்ம்முதன் மொழிவந்து புணர்ந்தது. கிருபை புரிவார்—உயிரீற்று மொழிமுன் மெய்ம்முதன் மொழிவந்து புணர்ந்தது. என்னை ஆதரிப்பார்—உயிரீற்று மொழிமுன் உயிர்முதன்மொழி வந்து புணர்ந்தது.

(2) பொருட் புணர்ச்சியாவது ஒரு மொழி தன் பொருள் நோக்கத்தால் வேறு மொழியோடு புணர்ந்து நிற்பது. அது **வேற்றுமைப்புணர்ச்சி அல்வழிப்புணர்ச்சி** என இருவகைப்படும்.

(3.) வேற்றுமைப் புணர்ச்சி ஐ, ஆல், கு, இன், அது, இல் என்னும் ஆறு உருபுகளும் மொழிக்கு நடுவில் மறைந்தும் வெளிப்பட்டும் நிற்கப் பதங்கள் பொருந்தும் புணர்ச்சியாம்.

**உதாரணம்:**

| ("வேற்றுமைத் தொகை".) | ("வேற்றுமை விரி") | ("உருபு".) |
|---|---|---|
| 2. நீர் குடித்தான்…………… | நீரைக்குடித்தான்…………………… | ஐ. |
| 3. கல்லெறிந்தான்…………… | கல்லாலெறிந்தான்…………………… | ஆல். |
| 4. கூலிவேலை…………… | கூலிக்குவேலை…………………… | கு. |
| 5. மலைவீழருவி…………… | மலையின்வீழருவி…………………… | இன். |
| 6. கனகசிகாமணிகை…………… | கனகசிகாமணியதுகை…………………… | அது. |
| 7. காட்டுப்புலி…………… | காட்டில்புலி…………………… | இல். |

## குறிப்பு

(a வேற்றுமை யேற்ற பெயர்ச்சொல்லுக்கும் அது கொண்டு முடியுஞ் சொல்லுக்கும் மத்தியில் உருபுமாத்திரம் வருவது "வேற்றுமை தழுவுதொடர்" என்றும், உருபோடு அவ்விடத்திற்கேற்ற வேறுமொழி வந்து முடிவது "வேற்றுமைத் தழாத்தொடரென்றுஞ்" சொல்லப்படும் (உ ம) நீர் குடித்தான் நீரைக்குடித்தான்—இவ்விரண்டும் வேற்றுமைத் தழுவுதொடராம், தயிர்க்குடம் (தயிரையுடைய குடம்) வேற்றுமைத் தழாத்தொடராம்

(b) தழாத்தொடராவது நிலைமொழி வருமொழியைப் பொருட்பொருத்தம் உறத் "தழுவாத்தொடர்," பொருட்பொருத்தம் உறத் தழுவிய தொடர் "தழுவுதொடர்'

(c) மொழிக்கு நடுவில் வேற்றுமை யுருபுகள் தொக்கு வருவதன்றி அதுகொண்டு முடியும் வேறு மொழியுந் தொக்குவரின் உருபும் பயனும் உடன்றொக்கத்தொகை யென்னப்படும் உதாரணம்:—பொன்காசு = பொன் + ஆல் + ஆகிய காசு, கைக்களிறு = கை +, ஐ + உடைய களிறு

(d) வேற்றுமைத் தொகை விரிந்துவிட்டது "வேற்றுமைத் தொகாநிலைத்தொடராம்" வேற்றுமை "யுருபும்' "பயனும்' உடன்றொக்கத்தொகை விரிந்துவிட்டது முன்னது வேற்றுமைத் தொகாநிலைத் தொடரும், பின்னது பெயரெச்சத்தொகாநிலைத்தொடருமாம்

(4) அல்வழிப் புணர்ச்சியாவது வேற்றுமையுருபுகள் இடையில்வராமல் நிலைமொழியும் வருமொழியும் ஒன்றுபட்டப் புணருவது. அது தொகைநிலைத் தொடர் தொகாநிலைத்தொடரென இருவகைப்படும்.

### உதாரணம் :

### (தொகைநிலைத்தொடர்—5).

| | |
|---|---|
| 1. வினைத்தொகை | கொல்யானை, அடுகளிறு |
| 2. { பண்புத்தொகை | கருங்குதிரை, செந்தாமரை, |
| { இருபெயரொட்டுப் பண்புத்தொகை } | சாரைப்பாம்பு, ஆயன் சாத்தன் |
| 3 உவமைத்தொகை | மதிமுகம், பவளவாய் |
| 4. உம்மைத்தொகை | இராப்பகல், சேரசோழபாண்டியர் |
| 5. அன்மொழித்தொகை | தேன்மொழி வந்தாள், தாழ்குழல் |

### (தொகாநிலைத்தொடர்—9)

| | |
|---|---|
| 1 எழுவாய்த்தொடர் | கனகசிகாமணி வந்தான் |
| 2 விளித்தொடர் | சாத்தா வா. |
| 3 { தெரிநிலைப் பெயரெச்சத்தொடர் | வந்த குதிரை |
| { குறிப்புப் பெயரெச்சத் தொடர் | பெரியசாத்தன் |
| 4 { தெரிநிலைவினையெச்சத்தொடர் | வந்து போனான். |
| { குறிப்பு வினையெச்சத்தொடர் | விருந்தின்றி யுண்ணான். |
| 5. தெரிநிலை வினைமுற்றுத்தொடர் | வந்தான் கனகசிகாமணி. |
| 6 குறிப்பு வினைமுற்றுத்தொடர் | பொன்னன் இவன் |
| 7. இடைச்சொற்றொடர் | மற்றொன்று |
| 8. உரிச்சொற்றொடர் ... | நனிபேதை |
| 9. அடுக்குத்தொடர் .. | பாம்பு பாம்பு. |

## குறிப்பு.

(a) மேற்கண்டபதினொன்று வகையும் அல்வழி தழுவுதொடர் என்னப்படும். 'சுனை யாழ அம்மி மிதப்ப' என்பது 'சுனைமிதப்ப அம்மியாழ' எனக் கூட்டப்படுதலால் "சுனை" என்பது "ஆழ" என்பதையும் "அம்மி" என்பது மிதப்ப என்பதையுந் தழுவாமையால் இப்படி வருகின்றவைகளெல்லாம் தழாத்தொடராகிய அல்வழிப் புணர்ச்சியாம்.

(b) வினைத்தொகை விரிந்தவிடத்துப் பெயரெச்சத் தொகாநிலைத்தொடராம். பண்புத்தொகையும் உம்மைத்தொகையும் விரிந்தவிடத்து இடைச்சொற்றொடராம். உவமைத்தொகை விரிந்தவிடத்து முன்னது இடைச்சொற்றொடராம். பின்னது இடைச்சொல்லடியாகப் பிறந்த பெயரெச்ச வினையெச்சத்தொடருமாம். அன்மொழித்தொகை விரிந்தவிடத்து வேற்றுமைத் தொகாநிலைத்தொடர் முதல் ஏற்பனவாம்.

(c) நிலைமொழி முதல் வேற்றுமையாகவும், விளிவேற்றுமையாகவும், தெரிநிலைப் பெயரெச்சமாகவும், குறிப்புப் பெயரெச்சமாகவும், தெரிநிலை வினையெச்சமாகவும், குறிப்பு வினையெச்சமாகவும், தெரிநிலை வினைமுற்றாகவும், குறிப்பு வினைமுற்றாகவும், இடைச்சொல்லாகவும், உரிச்சொல்லாகவும் நின்றால், அவை முறையேஎழுவாய்த்தொடர், விளித்தொடர், தெரிநிலைப் பெயரெச்சத்தொடர், குறிப்புப் பெயரெச்சத்தொடர், தெரிநிலை வினையெச்சத்தொடர், குறிப்பு வினையெச்சத்தொடர், தெரிநிலை வினைமுற்றுத்தொடர், குறிப்பு வினைமுற்றுத்தொடர், இடைச்சொற்றொடர், உரிச்சொற்றொடர் எனறு சொல்லப்படும்.

(5) பதப்புணர்ச்சியாவது நிலைமொழியீறும் வருமொழி முதலும் ஒன்றுபட்டிணங்குவதாம். அது **இயல்பு புணர்ச்சி விகாரப்புணர்ச்சி** யென இருவகைப்படும்.

(6) நிலைமொழியும்வருமொழியும்விகாரப்படாமல் புணருவது **இயல்பு புணர்ச்சியாம்.**

(உ-ம்) பொன்+மணி=பொன்மணி, அலை+பெரிது=அலைபெரிது.

(7) நிலைமொழியும் வருமொழியும் ஒன்றோடொன்று புணரும்போது **தோன்றல் திரிதல் கெடுதல்** விகாரங்களைப்பெற்று வருவது **விகாரப்புணர்ச்சியாம்.**

(8) நிலைமொழிக்கும் வருமொழிக்கும் நடுவில் **எழுத்தாவது சாரியையாவது** தோன்றுவது **தோன்றல் விகாரமாம்.**

**உதாரணம்:**—மா+காய்=மாங்காய், ஙகரந்தோன்றியது, ஆல்+காய்=ஆலங்காய், 'அம்' சாரியை தோன்றியது.

(9) ஓரெழுத்து மற்றோரெழுத்தாகத் திரிந்து வருவது **திரிதல் விகாரமாம்.**

**உதாரணம்:**—கல்+மலை=கன்மலை, லகரம் னகரமாகத் திரிந்தது; பொன்+தகடு =பொற்றகடு, னகரமுந் தகரமும் றகரமாகத் திரிந்தன.

(10) உள்ள எழுத்துக் கெட்டுநிற்பது **கெடுதல் விகாரமாம்.**

**உதாரணம்:**—மரம்+வேர்=மரவேர், மகரங்கெட்டது.



## குறிப்பு.

(a) [illegible] மொழி வருமொழிகளுடைய (முதல், இடை, கடை) மூன்றிடத்தும் வரும். உதாரணம் :—ஆறு+பத்து=அறுபது; இரும்பு+உலக்கை = இருப்புலக்கை, பல+பொருள்=பல்பொருள்.

(b) ஒரு புணர்ச்சியில் ஒரு விகாரம் வருவதல்லாமல் இரண்டு அல்லது மூன்று விகாரங்கள் வருதலும் உண்டு. உதாரணம்:—அவனை+அடித்தான்=அவனையடித்தான், அவனை+பார்த்தான்=அவனைப்பார்த்தான்—இவ்விரண்டுந் தோன்றல் விகாரம். கல்+மலை =கன்மலை, கல்+தீது=கற்றீது—இவ்விரண்டுந் திரிதல் விகாரம். மரம்+நார்=மரநார், பல+பொருள்=பல்பொருள்—இவ்விரண்டுங் கெடுதல் விகாரம். குளம்+கரை=குளக்கரை, மரம்+அடி=மரவடி, நாழி+உரி=நாடுரி—இம்மூன்றுங் கெடுதலுந் தோன்றலும் அடைந்த விகாரம். ஆறு+பத்து=அறுபது, வேள்+நன்மை=வேணன்மை—இவ்விரண்டுந் திரிதலுங் கெடுதலும் அடைந்த விகாரம், பனை+காய்=பனங்காய்—இது கெடுதலுந், தோன்றலுந், திரிதலும் அடைந்த விகாரம்.

—·✥·—

## பதப்புணர்ச்சி யிலக்கணத்திற்கு உதாரணம்:

N.B.—பொருட்புணர்ச்சி யிலக்கணம் இதனுளடக்கம்-Combination of Ides is included in this.

I. இலண்டனி லரசாளுகின்றஜயலக்ஷ்மியாகிய சக்ரவர்த்தினி யொருவருக்கு மாத்திரஞ் சிறந்த மரியாதையுண்டு.

1. இலண்டனில் + அரசு என்பது—இயல்புபுணர்ச்சி ; வேற்றுமைவழி, ஏழாம் வேற்றுமைத் தொகாநிலைத்தொடர்

2. அரசு + ஆளுகின்ற என்பது—கெடுதல் விகாரப்புணர்ச்சி: வேற்றுமை வழி, இரண்டாம் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர்

3. ஆளுகின்ற + ஜயலக்ஷ்மியாகிய என்பது—இயல்பு புணர்ச்சி ; அல்வழித் தெரிநிலைப் பெயரெச்சத்தொடர்.

4. ஜயலக்ஷ்மியாகிய + சக்ரவர்த்தினி என்பது—இயல்பு புணர்ச்சி ; அல்வழி யிடைச்சொற்றொடர்.

5. சக்ரவர்த்தினி + ஒருவருக்குமாத்திரம் என்பது—தோன்றல் விகாரப் புணர்ச்சி; அல்வழிப் பண்புத்தொகை நிலைத்தொடர்.

6. ஒருவருக்குமாத்திரம் + சிறந்த என்பது—திரிதல் விகாரப்புணர்ச்சி : அல்வழி யிடைச்சொற்றொடர்.

7. சிறந்த + மரியாதை என்பது—இயல்பு புணர்ச்சி; அல்வழித் தெரிநிலைப் பெயரெச்சத்தொடர்.

8. மரியாதை + உண்டு என்பது தோன்றல் விகாரப்புணர்ச்சி: அல்வழி யெழுவாய்த்தொடர்.

(II.) வீட்டிலுள்ளவர்கள் கண்டு வியந்துகொள்ளும் பொருட்டு மதிலேறி நிற்பது மிறுமாப்புட னரசனடை நடப்பதும் மயிலுக்கானந்தமாயிருந்தன.

1. வீட்டில் + உள்ளவர்கள் என்பது—இயல்பு புணர்ச்சி; வேற்றுமை வழி, ஏழாம் வேற்றுமைத் தொகாநிலைத்தொடர்.

2. உள்ளவர்கள் + கண்டு என்பது—இயல்பு புணர்ச்சி; அல்வழி, யெழுவாய்த்தொடர்.

3. கண்டு + வியந்துகொள்ளும் என்பது—இயல்பு புணர்ச்சி; அல்வழி, தெரிநிலை வினையெச்சத்தொடர்.

4. வியந்துகொள்ளும் + பொருட்டு என்பது—இயல்பு புணர்ச்சி; அல்வழித் தெரிநிலைப் பெயரெச்சத்தொடர்.

5. பொருட்டு + மதில் என்பது—இயல்பு புணர்ச்சி; வேற்றுமைவழி, நான்காம் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர்.

6. மதில் + ஏறி என்பது—இயல்பு புணர்ச்சி; வேற்றுமைவழி, ஏழாம் வேற்றுமைத்தொகை நிலைத்தொடர்.

7. ஏறி + நிற்பதும் என்பது—இயல்பு புணர்ச்சி; அல்வழித் தெரிநிலை வினையெச்சத்தொடர்.

8. நிற்பதும் + இறுமாப்புடன் என்பது—இயல்பு புணர்ச்சி; (தழாஅத் தொடர்) அல்வழி, எழுவாய்த்தொடர்.

9. இறுமாப்புடன் + அரசன் என்பது—இயல்புபுணர்ச்சி; வேற்றுமை வழி, மூன்றாம் வேற்றுமைத் தொகாநிலைத்தொடர்.

10. அரசன் + நடை என்பது—திரிதலுங் கெடுதலுமடைந்த விகாரப்புணர்ச்சி; வேற்றுமைவழி, ஆறாம்வேற்றுமைத்தொகை நிலைத்தொடர்.

11. நடை + நடப்பதும் என்பது—இயல்பு புணர்ச்சி; வேற்றுமைவழி, இரண்டாம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்கத் தொகைநிலைத்தொடர்.

12. நடப்பதும் + மயிலுக்கு என்பது—இயல்பு புணர்ச்சி; (தழாஅத் தொடர்) அல்வழி, எழுவாய்த்தொடர்.

13. மயிலுக்கு + ஆனந்தமாய் என்பது—கெடுதல் விகாரப்புணர்ச்சி; வேற்றுமைவழி, நான்காம் வேற்றுமைத் தொகாநிலைத்தொடர்.

14. ஆனந்தமாய் + இருந்தன என்பது—இயல்பு புணர்ச்சி; அல்வழித் தெரிநிலை வினையெச்சத்தொடர்.

(III.) மைசூராரசனை நோக்கி நீர் வாழ்க வென்றொரு பெரியவர் கூறி னார்.

1. மைசூர் + அரசனை என்பது—இயல்பு புணர்ச்சி; வேற்றுமைவழி, நானகாம் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர்.

2. அரசனை + நோக்கி என்பது—இயல்புபுணர்ச்சி; வேற்றுமைவழி, இரண்டாம் வேற்றுமைத் தொகாநிலைத்தொடர்.

3. நோக்கி + நீர் என்பது—இயல்பு புணர்ச்சி; அல்வழித்தெரிநிலை வினையெச்சத்தொடர்.

4. நீர் + வாழ்க என்பது—இயல்புபுணர்ச்சி; அல்வழி, எழுவாய்த் தொடர்.

5. வாழ்க + என்று என்பது—தோன்றல் விகாரப்புணர்ச்சி; அல்வழி, தெரிநிலை வினைமுற்றுத்தொடர்.

6. என்று + ஒரு என்பது—கெடுதல் விகாரப்புணர்ச்சி; அல்வழி, இடைச் சொற்றொடர்.

7. ஒரு + பெரியவர் என்பது—இயல்புபுணர்ச்சி; அல்வழிப் பண்புத தொகைநிலைத்தொடர்.

8. பெரியவர் + கூறினார் என்பது—இயல்பு புணர்ச்சி; அல்வழி, எழு வாய்த்தொடர்.

அப்பியாசம்.

N.B.—11-ம் பக்கத்தில்—வாக்கியாக்கச்சேதன விலக்கணங் கூறுவதற் காகக் கொடுக்கப்பட்டிருக்கும் 24 வாக்கியங்களுக்கும் புணர்ச்சி யிலக்கணங் கூறுக. (பதப்புணர்ச்சியும் பொருட்புணர்ச்சியு மென்றறிக.)



## ON DIVISIBLE WORDS.

## பகுபத முடிபிலக்கணக் குறிப்பு.

### WORDS.—பதங்கள்.

1. Words. எழுத்துகள் தனித்தாவது இரண்டு முதலியவாகத் தொடர்ந்தாவது ஒரு பொருளைத் தெரிவித்தால் பதமாம். அது பகாப்பதம் பகுபதம் என இருவகையாம்.

2. ஓர் எழுத்தாலாகிய மொழிகள்:—

(a) சிறப்புப்பதங்கள்:—ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ; கா, கூ, கை, கோ; சா, சீ, சே, சோ; தா, தீ, து, தூ, தே, தை; நா, நீ, நே, நை, நொ, நோ; பா, பூ, பே, பை, போ; மா, மீ, மூ, மே, மை, மோ, யா; வா, வீ, வை, வௌ.

(b) ஒப்பற்ற பதங்கள் —உ, ஒ, ஔ, கீ, கு, கௌ, கொ, த; ந, நு; ப, பி, பீ, ம வி, வே

3. Simple words பகுக்கப்படாத இயல்பினையுடைய சொல் பகாப்பதம். அது இரண்டு எழுத்துமுதல் ஏழெழுத்து ஈறாகத்தொடரும். (உ-ம்) அணி, அறம், அகலம், அருப்பம், தருப்பணம், உத்திராட்டாதி.

4. Compound words. பகுதி விகுதி முதலிய உறுப்புகளால் பகுக்கப்படும் சொல் பகுபதம் அது இரண்டு எழுத்து முதல் ஒன்பது எழுத்து ஈறாகத் தொடரும் (உ-ம) கூனி, கூனன், குழையன், பொருப்பன், அம்பலவன், அரங்கத்தான், உத்திராடத்தான், உத்திரட்டாதியான்.

கவனிப்பு

(a) ஒரே பகுதியையுடைய ஒருபகுபதம் இரண்டெழுத்து முதல் ஒன்பது எழுத்தீறாகத்தொடரும் ஆனால், நடத்துவிப்பிக்கிறான் என்பபகுதி முதலிய உறுப்பு வேறுபட்டு வருகின்றவைகளுக்கு இவ்வரையறையில்லையென்றறிக

(b) பகுத்தால் பொருள் உள்ளது பகுபதம், பகுத்தால் பொருள் இல்லது பகாப்பதம்

5. பகுதி, விகுதி, இடைநிலை, சாரியை, சந்தி, விகாரம் ஆகிய இவ்வாறுமே பகுபதத்தின் உறுப்புகளாம்.

6 Root பகுதி —சொற்களின் முதலில் பகாப்பதமாய் நிற்பதே பகுதி யென்னப்படும். (உ-ம) அறிஞன் என்பதில் "அறி" என்பதும், கூனன் என்பதில் "கூன்" என்பதும் பெயர்ப்பகுதிகளாம் . நடக்கிறன் என்பதில் "நட" என்பதும், செய்கிறன் என்பதில் "செய" என்பதும் வினைப்பகுதிகளாம

7. Termination. விகுதி.—விகுதியாவது மொழியின் கடையில் நிற்கும் ஓர் உறுப்பாம். (உ ம) கோக்கள் என்பதில் "கள்" என்பதும், தருமார் என்பதில் "மார்" என்பதும் பெயர்விகுதிகள் ; வந்தான் என்பதில் "ஆன்" என்பதும், போனாள் என்பதில் "ஆள்" என்பதும் வினைவிகுதிகள்.

8 Middle Particle. இடைநிலை —இடைநிலையாவது பகுதி விகுதிகளுக்கு மத்தியில் நின்று பெயர்ச்சொற்களிற் காலத்தை யுணர்த்தாமலும், வினைச்சொற்களிற் காலத்தை யுணர்த்தியும் நிற்கின்ற ஓர் உறுப்பாம். (உ-ம்) வலைச்சி, வலைஞன்—இவற்றில் சகரமும் ஞகரமும் பெயர் இடைநிலைகள் படிக்கிறன் என்பதில் "கிறு" என்பதும் போயினன் என்பதில் "இன்" என்பதும் வினை இடைநிலைகள்

9. Euphonic particle. **சாரியை:**—சாரியையாவது செவிக்கு இன்பம் பயத்தற் பொருட்டு மொழிகளைச் சார்ந்துவரும் ஓர் உறுப்பாம். (உ-ம்) **ஆலங்காய்** என்பதில் "அம்" என்பதும், வந்தனன் என்பதில் "அன்" என்பதுஞ் சாரியைகளாம்.

**கவனிப்பு:**—சாரியைகளின் அட்டவணை:—அன், ஆன், இன், அல், இல், அற்று, இற்று, அத்து, அம், ஆம், தம், நம், நும், ஏ, அ, ஆ, உ, ஐ, கு, து, ன் இவ்விருபத்தொன்றுஞ் சாரியைகளாம். (பதவியலிற் காண்க.)

10. Combination. **சந்தியாவது** நிலைமொழியும் வருமொழியும் ஒன்றோடொன்று புணருவது. (உ-ம்) பொன்மணி, அலைபெரிது—இவை இயல்பு புணர்ச்சி. மா + காய்=மாங்காய், கல்+மலை=கன்மலை, மரம் + வேர்=மரவேர்—இவை விகாரப்புணர்ச்சி (சந்தி, புணர்ச்சி என்பனஒருபொருட்சொற்கள்.)

11. Change. **விகாரம்:**—விகாரமாவது மொழிகளில் உண்டாகும் வித்தியாசம். அது செய்யுள் விகாரம், புணர்ச்சி விகாரம், பகுதி விகார மென மூவகையாம்.

12. செய்யுள் விகாரமென்பது அடி தொடை முதலியவற்றை நோக்கிய விடத்து நேரும். அது வலித்தல், மெலித்தல், நீட்டல், குறுக்கல், விரித்தல், தொகுத்தல், முதற்குறை, இடைக்குறை, கடைக்குறை யென ஒன்பது வகைப்படும். இவ்விகாரங்கள் வழக்கத்திலும் உண்டு. (பதவியலிற் காண்க.)

13. புணர்ச்சி விகாரம் நிலைமொழி வருமொழிகளின் சந்திகளினால் மொழி மூன்றிடத்து நேரும். அது தோன்றல், திரிதல், கெடுதல் என மூன்று வகையாம். இதுதான் பகுபத முடிபிலக்கணத்திற் சந்தி யென்று சொல்லப்படுவது. (புணரியலிற் காண்க.)

14. காலங் காட்டுதற்காயினும் இயல்பாகவாயினும் மொழிகள் விகாரப்பட்டு வருவது பகுதி விகாரமாம். உதாரணம்: நடு—நட்டான் என்பது காலங்காட்டுதல். கொணு—கொணர்ந்தான் என்பது இயல்பாக மாறுதல்.



## THE LIST OF TERMINATIONS OF VERBS AND NOUN

## விகுதிகளைக் காட்டும் அட்டவணை.

1. தன்மை யொருமை வினைமுற்று விகுதிகள் : என், ஏன், அன், அல், கு, டு, து, று—உண்டனென், உண்டேன், உண்டனன்; உண்பல், உண்கு, வந்து, உண்டு, சென்று.

குறிப்பு.

(a) "அல்"—எதிர்காலத் தன்மை யொருமையில் மாத்திரம் வரும். உண்பல்= உண்பேன்.

(b) "டு"—இறந்தகாலத்தையும் ; "கு"—எதிர்காலத்தையும் ; "து," "று"—இறப்பெதிர்வாகிய இரண்டு காலங்களையும் இடைநிலை வேண்டாதுணர்த்தும். உண்டு=உண்டேன்; உண்கு=உண்பேன் ; வந்து=வந்தேன், சென்று=சென்றேன் ; வருது=வருவேன், சேறு=செல்வேன்.

2. தன்மைப்பன்மை வினைமுற்று விகுதிகள் : அம், ஆம், எம், ஏம், ஓம், கும், தும், டும், றும்—உண்கின்றனம், உண்கின்றாம், உண்கின்றனெம், உண்கின்றேம், உண்கிறோம், உண்கும், வந்தும், உண்டும், சென்றும்.

குறிப்பு:—உண்கும்=உண்போம், வந்தும்=வந்தோம், உண்டும்=உண்டோம், சென்றும்=சென்றோம் ; வருதும்=வருவோம், சேறும்=செல்வோம்.

3. முன்னிலை யொருமை வினைமுற்று விகுதிகள் : ஐ, ஆய், இ—உண்டனை, உண்டாய், உண்டி.

4. முன்னிலைப்பன்மை வினைமுற்று விகுதிகள்: இர், ஈர்—உண்டனிர், உண்டீர்.

5. ஆண்பால் படர்க்கை வினைமுற்று விகுதிகள் : அன், ஆன்—உண்டனன், உண்டான்.

6. பெண்பாற் படர்க்கை வினைமுற்று விகுதிகள் : அள், ஆள்—உண்டனள், உண்டாள்.

7. பலபாற் படர்க்கை வினைமுற்று விகுதிகள் : அர், ஆர், ப, மார்—உண்டனர், உண்டார், உண்ப, உண்மார். (உண்ப=உண்டார், உண்பார். உண்மார்=உண்பார்.)

8. ஒன்றன்பால் படர்க்கை வினைமுற்று விகுதிகள் : து, று—உண்டது, ஆயிற்று.

9. பலவின்பாற் படர்க்கை வினைமுற்று விகுதிகள் : அ—உண்டன.

10. ஆண்பால், பெண்பால், ஒன்றன்பால், பலவின்பால்களுக்குப் பொதுவாகிய வினைமுற்று விகுதி : உம்—உண்ணும்.

11. ஒருமை ஏவல் வினைமுற்று விகுதிகள் : ஆய், இ—உரையாய், உரைதி.

12. பன்மை ஏவல் வினைமுற்று விகுதிகள். இர், ஈர், மின், உம்—உரைத்திர், உரையீர், உரைமின், உரையும்.

13. வியங்கோள் வினைமுற்று விகுதிகள்: க, ய, ர், அல், ஆல், ஒட்டும், ஆக, கட—வாழ்க, வாழிய, வாழியர், உண்ணல், ஓரால், வாழட்டும், வாழ் வேணுக, வாழக்கடவேன். (ஓரால்=ஒருவற்க=நீங்கற்க=நீங்காதே.)

குறிப்பு:—"அ" "தல்" என்பனவும் வியங்கோள் விகுதிகளாய் வரும். (உ-ம்) நாள் மறை யறங்களோங்க, மனத்துக்கண் மாசிலனுதல்.

14. துணைவிகுதி அல்லது விகுதிமேல் விகுதி: கள்—வருவார்கள்.

15. எதிர்மறை விகுதிகள்: ஆ, இல், அல், ஏல்—செய்யான், செய்கி லின், செய்கலான், செய்யேல்.

16. இறந்தகால வினையெச்சவினை விகுதிகள்: உ, இ, ய் (யகரமெய்), பு, ஆ, ஊ, என, உம்—படித்து, ஓடி, போய், செய்பு, செய்யா, செய்யூ, செய்தென, காண்டலும்.

17. எதிர்கால வினையெச்சவினை விகுதிகள்: இன், இல், ஆல், கால், ஏல், எனின், ஆயின், ஏனும், ஆனுல், இய, இயர், வான், பான், பாக்கு, கடை, வழி, இடத்து, உழி—படிக்கின், படிக்கில், படித்தால், படிக்குங்கால், உண்டா னேல், உண்டானெனின், உண்டானுயின், உண்டானேனும், உண்டானு னுல், ஆடிய, ஆடியர், விடுவான், நடப்பான், விடுபாக்கு, செய்தக்கடை, செய் தவழி, செய்தவிடத்து, செய்துழி.

18. நிகழ்கால (முக்காலத்துக்கும் பொதுவான) வினையெச்சவினை விகு திகள்: அ, கு—படிக்க, உணற்கு.

19. எதிர்மறை விகுதியோடு வரும் வினையெச்சவினை விகுதிகள் : மல், மை, மே, து—படியாமல், படியாமை, படியாமே, படியாது.

20. இறந்தகாலப் பெயரெச்சவினையில் வரும் விகுதி : அ—படித்த.

21. நிகழ்காலப் பெயரெச்சவினையில் வரும் விகுதி : அ—படிக்கிற.

22. எதிர்காலப் பெயரெச்சவினை விகுதி : உம்—படிக்கும்.

23. எதிர்மறை விகுதியோடு வரும் பெயரெச்சவினை விகுதி : அ—படி யாத.

24. இறந்தகாலத் தொழிற்பெயரில் வரும் விகுதிகள் : மை, து—படித் தமை, படித்தது.

25. நிகழ்காலத் தொழிற் பெயரில் வரும் விகுதிகள் : மை, து—படிக் கின்றமை, படிக்கிறது.

26. எதிர்காலத் தொழிற்பெயரில் வரும் விகுதி : து—வருவது.

27. காலங்காட்டாத தொழிற்பெயர் விகுதிகள் : தல், அல், அம், ஐ, கை, வை, கு, பு, உ, தி, சி, வி, உள், காடு, பாடு, அரவு, ஆனை, வு, மதி, அடம்,

[illegible]—படித்தல், ஆடல், வாட்டம், மகாலை, வருகை, பார்வை, போக்கு, நடப்பு, வரவு, மறதி, உணர்ச்சி, கல்வி, விக்குள், சாக்காடு, கோட்பாடு, தோற்றரவு, வாரானை, இழிவு, இறக்குமதி, கட்டடம், ஆட்டுவான் (=ஆட்டுதல்), எச்சில், தழால், வெகுளி.

28. எதிர்மறை விகுதியோடு வரும் தொழிற்பெயர் விகுதிகள் : மை, து—நடவாமை, நடவாதது.

29. உடன்பாட்டுப் பொதுக்குறிப்பு வினைமுற்றுகள் : டு, தகும், படும், வேண்டும், ஆம், ஒல்லும், கூடும், முடியும்—உண்டு, கற்பிக்கத்தகும், கற்பிக்கப்படும், கற்பிக்கவேண்டும், கற்பிக்கலாம், கற்பிக்கவொல்லும், கற்பிக்கக் கூடும், கற்பிக்கமுடியும்.

30. எதிர்மறைப் பொதுக்குறிப்பு வினைமுற்று விகுதிகள் : ஐ, று, தகாது, படாது, வேண்டாம், ஆகாது, ஒல்லாது, கூடாது, முடியாது—இல்லை, இன்று, கற்பிக்கத்தகாது, கற்பிக்கப்படாது, கற்பிக்கவேண்டாம், கற்பிக்கலாகாது, கற்பிக்கவொல்லாது, கற்பிக்கக்கூடாது, கற்பிக்கமுடியாது.

31. உடன்பாட்டுக் குறிப்பு வினையெச்ச வினை விகுதி : அ—மெல்ல.

32. எதிர்மறையில் வரும் குறிப்பு வினையெச்சவினை விகுதிகள் : மல், மை, மே, து, றி, ஆல், கால், கடை, வழி, இடத்து—அல்லாமல், அல்லாமை, அல்லாமே, அல்லது, அன்றி, அல்லால், அல்லாக்கால், அல்லாக்கடை, அல்லாவழி, அல்லாவிடத்து.

33. உடன்பாட்டுக் குறிப்புப் பெயரெச்சவினை விகுதிகள் : அ, இய—செய்ய, அழகிய.

34. எதிர்மறையில் வரும் குறிப்புப்பெயரெச்சவினை விகுதி : அ—இல்லாத.

35. ஆற்றல் உணர்த்தும் விகுதிகள்: மாட்டு, கில்—செய்யமாட்டேன், செய்கிற்பேன்.

36. மங்கலப்பொருளை அல்லது வழக்கப்பொருளை யுணர்த்தும் விகுதி: வா.

> **மங்கலம் :** போய் வருகிறேன் (=போகிறேன்), போய்வாரும் (=போம்), அழைத்துவா (=போய் அழை) இவற்றில் போய்வா அழைத்துவா—பகுதிகள்.
>
> **வழக்கு :** நடந்துவருகிறது (=நடக்கிறது), செய்து வருகிறார்கள் (=செய்கிறார்கள்). இவற்றில் "நடந்துவா" 'செய்துவா"—பகு

37. கிருபைப்பொருளை யுணர்த்தும் விகுதி : அருள்—திருவாய்மலர்ந் தருளினார் (=மலர்ந்தார்), குருவானவர் எழுந்தருளினார் (=எழுந்தார்). இவற்றில் மலர்ந்தருள், எழுந்தருள்-பகுதிகள்.

38. தற்செயல் விகுதி : கோள்—விழித்துக்கொள்ளுகிறான். (இங்கே விழித்துக் கொள்ளுகிறான் என்பது விழிக்கிறான் என்று அருத்தமாம். இந்த வினையில் "விழித்துக்கோள்"—பகுதி.

குறிப்பு.

(a) தற்செயல் விகுதி "கொள்" ஒரு வினைச்சொல்லுக்கு ஈற்றில் வரும்போது சுயாதீனத்தை யுணர்த்தும். (உ-ம்) விழித்துக்கொள்ளுகிறானென்பது தன்னிஷ்டபடி அவனே விழிக்கிறான் என்று அருத்தமாம். ஒருவனுடைய கட்டாயத்தினாலல்லவென்றறிக.

(b) "கொள்" என்னும் தற்செயல் விகுதி "வா," "போ" என்னும் வினைச்சொற்களுக்கு ஈற்றில் வருவதுடன் முதலினும் வரும். அப்போது "வா," "போ" என்னுஞ் சொற்கள் செயப்படுபொருள் குன்றா வினையாய் நிற்கும். (உ-ம்) பணம் கொண்டுபோகிறான், புஸ்தகம் கொண்டுவருகிறான். இங்கே "கொண்டுபோ" "கொண்டுவா" என்பவை—பகுதிகளாம்.

39. எச்சரிக்கைப் பொருளை யுணர்த்தும் விகுதி : வை—அவனை அனுப்பிவைக்கிறான், (=அனுப்புகிறான்), மீனைக் குளத்தில் விட்டுவைக்கிறான் (=விடுகிறான்). இவற்றில் "அனுப்பிவை," "விட்டுவை"—பகுதிகள்.

40. துணிவு பொருள் விகுதிகள் : விடு, ஒழி, தொலை, போடு—கொடுத்துவிடுவான், போயொழிந்தான், எழுதித்தொலைத்தான், வெட்டிப் போட்டான். இவற்றில் கொடுத்துவிடு, போயொழி, எழுதித்தொலை, வெட்டிப்போடு—பகுதிகள்.

41. பிறவினை விகுதிகள் : வி, பி, கு, சு, டு, து, பு, று—செய்விக்கிறான், நடப்பிக்கிறான், போக்குகிறான், பாய்ச்சுகிறான், உருட்டுகிறான், நடத்துகிறான், எழுப்புகிறான், பயிற்றுகிறான்.

42. செயப்பாட்டுவினை விகுதிகள் : படு, உண்—எழுதப்படுகிறான், அடியுண்டான்.

43. பிற்பொருட்டு விகுதி : உம்—வந்தது +"உம்"+ போனான்=வந்ததும் போனான்.

44. துணைவினை (வினைமேல்வினை, அல்லது பகுதிப்பொருள் விகுதி), இரு, இடு, போ, தா—எழுந்திருந்தான், உரைத்திட்டான், ஒழிந்துபோனான், போதந்தான் (=போயினான்). இங்கே எழுந்திரு, உரைத்திடு, ஒழிந்துபோ, போதா—இவைகள் பகுதிகளாம்.

45. வினை முதற்பொருளில் வரும் விகுதிகள் : இ, ஐ, அம்—அலரி, பறவை, எச்சம்.

46. செயப்படு பொருளில் வரும் விகுதிகள் : இ, ஐ, அம்—ஊருணி; தொடை, தொல்காப்பியம்.

47. கருவிப்பொருளில் வரும் விகுதிகள் : இ, ஐ, அம்—மண்வெட்டி, பார்வை, நோக்கம்.

48. பெயர் விகுதிகள் : அன், ஆன், அள், ஆள், அர், ஆர், அ, து, இ, மார், மன், மான், கள், வை, தை, கை, பி, முன், அல், ன், ள், ர், வ்—குழையன், வானத்தான், குழையள், வானத்தாள், குழையர், வானத்தார், குழையன, யாது, பொன்னி, தேவிமார், வடமன், கோமான், கோக்கள், அவை, எந்தை, எங்கை, தம்பி, எம்முன், தோன்றல், பிறன், மகள், பிறர், அவ்.

## குறிப்பு.

(a) "கள்" என்னும் பன்மைப்பெயர் விகுதி உயர்திணையில் மரியாதை யொருமை விகுதி யெனவும் படும். (உ-ம்) தாங்கள் சொன்னீர்கள், ஐயா அவர்கள் வருவார்கள், "தாங்கள்" "அவர்கள்" என்னும் படர்க்கைப் பன்மைப் பெயர்களும், "சொன்னீர்கள்" "வருவார்கள்" என்னும் பலர்பால் படர்க்கை வினை முற்றுகளும் ஈண்டு மரியாதை யொருமையைக் குறிக்கின்றன வென்றறிக.

(b) பெயரினும் வினையினும் "னகர", "ளகர", "ரகர", "யகர", ஈற்றுச் சொல்லின் அயலிலிருக்கும் "ஆகாரம்" செய்யுளில் ஓகாரமாகும். (உ-ம்) நல்லார் = "நல்லோர்", என்றிசினார் = "என்றிசினோர்"

(c) "இகரவிகுதி" பெண்பாலையே அல்லாமல் ஆண்பாலையும் ஒன்றன்பாலையுங் காட்டுவதுண்டு. உதாரணம்:—"ஆண்பால்": துறவி, வில்லி; "ஒன்றன் பால்": நாற்காலி, முக்காலி.

49. பண்புப்பெயர் விகுதிகள் : மை, ஐ, பு, கு, றி, று, அம், பம், நர், உ, சி, து, இல், மன்—நன்மை, தொல்லை, மாண்பு, நன்கு, நன்றி, நன்று, நலம், ஒட்பம், நன்னர், மழவு, மாட்சி, தீது, குறில், பருமன்.

## குறிப்பு.

பண்பிற்பகா நிலைப்பதம் : செம்மை, கருமை, பசுமை, வெண்மை, திண்மை, நுண்மை, சிறுமை, பெருமை, குறுமை, நெடுமை, தீய்மை, தூய்மை, வெம்மை, குளிர்மை, கொடுமை, கடுமை, மேன்மை, கீழ்மை, மெய்மை, வறுமை, பொய்மை, வன்மை, மென்மை, நன்மை, ஐம்மை, பழைமை, புதுமை, இனிமை, அணுமை, நிலைமை, ஆண்மை, உம்மை, ஒருமை, பன்மை, இருமை, அருமை, கைம்மை, கூர்மை, சேண்மை, சேண்மை, வளமை, இளமை, முதுமை, சேய்மை, உண்மை, பொன்மை, அணிமை, தண்மை, நொய்மை, இன்மை, பருமையும் இவை போல்வன பிறவுஞ் சொன்னிலையாற் பகுபதமாயினும், "மை" விகுதிக்குப் பகுதிப் பொருளல்லது வேறுபொருள் இல்லாமையினாலே பொருணிலையாற் பகாப்பதமாம்.

50. தன்மைப்பொருள் உணர்த்தும் விகுதி : மை—ஆண்மை.

## இடைநிலையைக் காட்டும் அட்டவணை.

51. இறந்தகால இடைநிலைகள் : த், ட், ற், இன்—படித்தான், கண்டான், சென்றான், அனுப்பினான்.

குறிப்பு: ("ய்") யகரமெய்யும், "இசின்" என்பதும் இறந்தகால இடைநிலைகளாயும் வரும். (உ-ம்) போயது, என்றிசினோர்.

52. நிகழ்கால இடைநிலைகள் : கிறு, கின்று, ஆநின்று—படிக்கிறான், படிக்கின்றான், படியாநின்றான்.

குறிப்பு: "ஆநின்று," "ஆயிருந்து," "ஆநிற்கிறு," "ஆநிற்கின்று," "ந்" "த்"—இவ்வாறும் நிகழ்கால இடைநிலைகளாயும் வரும். (உ-ம்) உண்ணாநின்றான், உண்ணாவிருந்தான், உண்ணாநிற்கிறான், உண்ணாநிற்கின்றான், உணனூநர், உரைத்திர். (உண்ணூநர்="உண்கிறார்கள்", உரைத்திர்=சொல்லுகிறீர்கள்).

53. எதிர்கால இடைநிலைகள்: வ், ப்—செய்வான், படிப்பான்.

குறிப்பு: ("ம்") மகரமெய், "மன்", "கு"—இம்மூன்றும் எதிர்கால இடைநிலைகளாயும் வரும். (உ-ம்) என்மர், என்மனார், செய்கேன், செய்வேன்.

---

## METHOD OF DIVIDING DIVISIBLE WORDS.

## பகுபத முடிபிலக்கணங்கூறும் விதம்.

### (தெரிநிலை வினைப்பகுபதம்.)

1. களிப்பிக்கப்படுகின்றேன் : களி—தன்வினைப்பகுதி, பி—பிறவினை விகுதி, (ப்) பகரமெய்—தோன்றல் சந்தி, களிப்பி-பிறவினைப்பகுதி; கு—சாரியை, (க்) ககரமெய்—தோன்றல் சந்தி, (அ) அகரம்—சாரியை, (உ) உகரம்—கெடுதல் சந்தி, படு—செயப்பாட்டுவினை விகுதி, (ப்) பகரமெய்—தோன்றல் சந்தி, களிப்பிக்கப்படு—செயப்பாட்டு வினைப்பகுதி; கின்று-நிகழ்கால இடைநிலை, ஏன்—தன்மை யொருமை வினைமுற்றுவிகுதி, (உ) உகரம்—கெடுதல் சந்தி; இவ்வாறு முடிந்த களிப்பிக்கப்படுகின்றேன் என்னும் பகுபதந் தெரிநிலை நிகழ்காலத் தன்மை யொருமை வினைமுற்று.

2. கண்டோம் : காண்—பகுதி, (கா) ககர ஆகாரம் (க) ககர அகரமானது குறுக்கல் விகாரம், ஓம்—தன்மைப் பன்மை வினைமுற்று விகுதி, (ட்) டகரமெய்—இறந்தகால இடைநிலை; இவ்வாறு முடிந்த கண்டோம் என்னும் பகுபதந் தெரிநிலை இறந்தகாலத் தன்மைப் பன்மை வினைமுற்று.

3. உண்டாய் : உண்—பகுதி, ஆய்—முன்னிலை யொருமை வினைமுற்று விகுதி, (ட்) டகரமெய்—இறந்தகால இடைநிலை, இவ்வாறு முடிந்த உண்டாய் என்னும் பகுபதந் தெரிநிலை இறந்தகால முன்னிலை யொருமை வினைமுற்று.

4. சென்றீர்கள் : **செல்**-பகுதி, **ஈர்**—முன்னிலைப்பன்மைவினைமுற்று விகுதி, **கள்**—விகுதிமேல் விகுதி, (ற்) றகரமெய்—இறந்தகால இடைநிலை, (ல்—ற்) லகரமெய் றகரமெய்யானது—திரிதல் சந்தி, (ற்—ன்) றகரமெய் னகரமெய்யானது மெலித்தல்விகாரம்; இவ்வாறு முடிந்த **சென்றீர்கள்** என்னும் பகுபதந் தெரிநிலை இறந்தகால முன்னிலைப்பன்மை வினைமுற்று.

5. அனுப்பிவைக்கிறான்: **அனுப்பு**—தன்வினைப் பகுதி, (இ) இகரம்—சாரியை, (உ) உகரம்—கெடுதல் சந்தி, **வை**—எச்சரிக்கைப் பொருளையுணர்த்தும் விகுதி, **அனுப்பிவை**—அனைத்தும் ஒருபகுதி; **ஆன்**—ஆண்பால் படர்க்கை வினைமுற்று விகுதி, **கிறு**—நிகழ்கால இடைநிலை, (க்)ககரமெய்—தோன்றல் சந்தி, (உ) உகரம்—கெடுதல் சந்தி ; இவ்வாறு முடிந்த **அனுப்பிவைக்கிறான்** என்னும் பகுபதந் தெரிநிலை நிகழ்கால ஆண்பால் படர்க்கை வினைமுற்று.

6. விழித்துக்கொண்டாள் : **விழி**—தன்வினைப்பகுதி, **து**—சாரியை, (த்) தகரமெய்—தோன்றல் சந்தி, **கொள்**—தற்செயல்விகுதி, (க்) ககரமெய்—தோன்றல் சந்தி, **விழித்துக்கொள்**—அனைத்தும் ஒரு பகுதி ; **ஆள்**—பெண்பால் படர்க்கை வினைமுற்று விகுதி, (ட்) டகரமெய்-இறந்தகால இடைநிலை, (ள்—ட்) ளகரமெய் டகரமெய்யானது—திரிதல் சந்தி, (ட்—ண்) டகரமெய் ணகரமெய்யானது மெலித்தல் விகாரம் ; இவ்வாறு முடிந்த **விழித்துக்கொண்டாள்** என்னும் பகுபதந் தெரிநிலை இறந்தகாலப் பெண்பால் படர்க்கை வினைமுற்று.

7. மலர்ந்தருளினார் : **மலர்**—தன்வினைப்பகுதி, **து**—சாரியை, (த்) தகரமெய்—தோன்றல் சந்தி, (த்—ந்) தகரமெய் நகரமெய்யானது—மெலித்தல் விகாரம், **அருள்**—கிருபைப்பொருளை யுணர்த்தும் விகுதி, (உ) உகரம்—கெடுதல் சந்தி, **மலர்ந்தருள்**—அனைத்தும் ஒரு பகுதி; **ஆர்**—பலர்பால் படர்க்கை வினைமுற்று விகுதி, **இன்**—இறந்தகால இடைநிலை; இவ்வாறு முடிந்த **மலர்ந்தருளினார்** என்னும் பகுதமானது (ஈண்டு மரியாதையில் ஒருமைப்பொருளை யுணர்த்துவதால்) ஆண்பால் படர்க்கை வினைமுற்றாம்.

8. கொடுத்துவிட்டார்கள் : **கொடு**—தன்வினைப்பகுதி, **து**—சாரியை, (த்) தகரமெய்—தோன்றல் சந்தி, **விடு**—துணிவு பொருளையுணர்த்தும் விகுதி, **கொடுத்துவிடு**—அனைத்தும் ஒரு பகுதி ; **ஆர்**—பலர்பால் படர்க்கை வினைமுற்று விகுதி, **கள்**—விகுதி மேல்விகுதி, **கொடுத்துவிடு** என்னும் **பகுதி இரட்டி** இறந்தகாலங்காட்டியது—விரித்தல் விகாரம், (உ) உகரம்—கெடுதல் சந்தி; இவ்வாறுமுடிந்த **கொடுத்துவிட்டார்கள்** என்னும் பகுபதந் தெரிநிலை இறந்தகாலப் பலர்பால் படர்க்கை வினைமுற்று.

N.B.—"விடு" என்னும் விகுதியிலுள்ள ஒற்று இரட்டி "விட்டு" என்றாகி, இறந்தகாலங் காட்டியது. இதைப் பகுதி விகாரம் என்றுஞ் சொல்வர்.

9. கொண்டுபோயிற்று : **கொள்** —தன்வினைப்பகுதி, **டு**—எழுத்துப் பேறு, (ள்—ட்) ளகரமெய் டகரமெய்யானது—திரிதல் சந்தி, (ட்—ண்) டகரமெய் ணகரமெய்யானது—மெலித்தல் விகாரம், **போ**—துணைவினை, **கொண்டுபோ**—அனைத்தும் ஒரு பகுதி; **று**—ஒன்றன்பால் படர்க்கை வினை முற்று விகுதி, **இன்**—இறந்தகால இடைநிலை, (ன்—ற்) னகரமெய் றகர

மெய்யானது—திரிதல் சந்தி, (ய்) யகரமெய் தோன்றல் சந்தி; இவ்வாறு முடிந்த **கொண்டுபோயிற்று** என்னும் பகுபதந் தெரிநிலை இறந்தகால ஒன்றன்பாற் படர்க்கை வினைமுற்று.

10. வந்தன : **வா**—பகுதி, (வா—வ) வகர ஆகாரம், வகர அகரமானது—குறுக்கல் விகாரம், (**அ**) அகரம்—பலவின்பால் படர்க்கை வினைமுற்று விகுதி, (**த்**) தகரமெய்—இறந்தகால இடைநிலை, **அன்**—சாரியை, (**த்**) தகரமெய்—தோன்றல் சந்தி ; (**த்—ந்**) தகரமெய் நகரமெய்யானது—மெலித்தல் விகாரம் ; இவ்வாறு முடிந்த "**வந்தன**" என்னும் பகுபதம் தெரிநிலை இறந்தகாலப் பலவின்பால் படர்க்கை வினைமுற்று.

11. * படிப்பாய்: **படி**—பகுதி, **ஆய்**—ஏவலொருமை வினைமுற்றுவிகுதி, (**ப்**) பகரமெய்—எழுத்துப்பேறு, (ப்) பகரமெய்—தோன்றல் சந்தி; இவ்வாறு முடிந்த **படிப்பாய்** என்னும்பகுபதம் ஏவல் ஒருமை வினைமுற்று. (**ஆய்** என்னும் விகுதியே எதிர்காலத்தையுங் காட்டிற்று.)

12. போய்வாரும்: **போ**—தன்வினைப் பகுதி, (**ய்**) யகரமெய்—எழுத்துப்பேறு, **வா**—மங்கலப் பொருளை யுணர்த்தும் விகுதி, **போய் வா**—அனைத்தும் ஒரு பகுதி, **ரு**—விரித்தல் விகாரம், **உம்**—ஏவல் பன்மை வினைமுற்று விகுதி, (**உ**) உகரங்—கெடுதல்சந்தி; இவ்வாறு முடிந்த **போய்வாரும்** என்னும் பகுபதமானது (ஈண்டு மரியாதையில் ஒருமைப்பொருளை யுணர்த்துவதால்) ஏவல் ஒருமை வினைமுற்றும்.

13. செய்மின்: **செய்**—பகுதி, **மின்**—ஏவல்பன்மை வினைமுற்று விகுதி; இவ்வாறு முடிந்த **செய்மின்** என்னும் பகுபதந் தெரிநிலை ஏவற்பன்மை வினைமுற்று. (**மின்** என்னும் விகுதியே எதிர்காலத்தையுங் காட்டியது.)

14. செய்யுங்கள் : **செய்**—பகுதி, **உம்**—ஏவல் பன்மை வினைமுற்று விகுதி, (**ய்**) யகரமெய்—தோன்றல் சந்தி, **கள்**—விகுதிமேல்விகுதி, (**ம்—ங்**) மகரமெய் ஙகரமெய்யானது—திரிதல் சந்தி; இவ்வாறு முடிந்த **செய்யுங்கள்** என்னும் பகுபதம் ஏவல்பன்மை வினைமுற்று. (**உம்** என்னும் விகுதியே எதிர்காலத்தையுங் காட்டிற்று.)

15. வாழ்க : **வாழ்**—பகுதி, (**க**) ககரம்—வியங்கோள் வினைமுற்று விகுதி; இவ்வாறு முடிந்த **வாழ்க** என்னும் பகுபதந் தெரிநிலை வியங்கோள் வினைமுற்று.

16. வியந்துகொண்டு : **விய**—தன்வினைப்பகுதி, **து**—சாரியை, (**த்**) தகரமெய் தோன்றல் சந்தி ; (**த்—ந்**) தகரமெய் நகர மெய்யானது—மெலித்தல் விகாரம், **கோள்**—தற்செயல் விகுதி, **வியந்துகோள்**—அனைத்தும் ஒரு பகுதி ; (உ) உகரம்—இறந்தகால வினையெச்ச விகுதி, (ட்) டகரமெய்—இறந்தகால இடைநிலை, (ள்—ட்) ளகரமெய் டகரமெய்யானது—திரிதல் சந்தி, (ட்—ண்) டகரமெய் ணகரமெய்யானது—மெலித்தல் விகாரம் ; இவ்வாறு முடிந்த **வியந்து கொண்டு** என்னும் பகுபதந் தெரிநிலை இறந்தகால வினையெச்சம்.

---

* ஏவல் வினைமுற்றுக்கும் எதிர்கால முன்னிலை வினைமுற்றுக்கும் வித்தியாசம் யாதெனில்:—ஏவல்வினைமுற்றில் "விகுதியே" காலங்காட்டும். முன்னிலைவினைமுற்றில் "இடைநிலை" காலங்காட்டு மென்றறிக.

17. காட்ட : காண்—தன்வினைப் பகுதி, டு-பிறவினை விகுதி, (ண்—ட்) ணகரமெய் டகரமெய்யானது—திரிதல் சந்தி, காட்டு—பிறவினைப்பகுதி ; (அ) அகரம்—நிகழ்கால வினையெச்ச விகுதி, (உ) உகரம்—கெடுதல் சந்தி ; இவ்வாறு முடிந்த காட்ட என்னும் பகுபதந் தெரிநிலை நிகழ்காலப் பிறவினை வினையெச்சம்.

18. அசைந்தால் : அசை—பகுதி, ஆல்-எதிர்கால வினையெச்ச விகுதி, து—சாரியை, (உ) உகரம்—கெடுதல் சந்தி, (த்)தகரமெய்-தோன்றல் சந்தி, (த்—ந்) தகரமெய் நகரமெய்யானது—மெலித்தல் விகாரம் ; இவ்வாறு முடிந்த அசைந்தால் என்னும் பகுபதம் தெரிநிலை எதிர்கால வினையெச்சம்.

19. சிறந்த : சிற—பகுதி, (அ) அகரம்—பெயரெச்ச விகுதி, (த்) தகர மெய்—இறந்தகால இடைநிலை, (த்) தகரமெய்—தோன்றல் சந்தி, (த்—ந்) தகரமெய் நகரமெய்யானது—மெலித்தல்விகாரம் ; இவ்வாறு முடிந்த சிறந்த என்னும் பகுபதந் தெரிநிலை இறந்தகாலப் பெயரெச்சம்.

20. சொல்லப்படுகிற : சொல்—தன் வினைப்பகுதி, படு—செயப்பாட்டு வினை விகுதி, (அ) அகரம்—சாரியை, (ல்) லகரமெய்—தோன்றல் சந்தி (ப்) பகரமெய்—தோன்றல் சந்தி. சொல்லப்படு—செயப்பாட்டு வினைப் பகுதி ; (அ) அகரம்-பெயரெச்ச விகுதி, கிறு—நிகழ்கால இடைநிலை, (உ) உகரம்—கெடுதல் சந்தி ; இவ்வாறு முடிந்த சொல்லப்படுகிற என்னும் பகுபதந் தெரிநிலை நிகழ்காலப் பெயரெச்சம்.

21. தருவிக்கும் : தா—தன்வினைப்பகுதி, (தா—த) தகர ஆகாரம் தகர அகரமானது—குறுக்கல் விகாரம், ரு—விரித்தல் விகாரம், வி—பிற வினை விகுதி, தருவி—பிறவினை பகுதி ; உம்—எதிர்காலப் பெயரெச்ச விகுதி, கு—சாரியை, (உ) உகரம்—கெடுதல் சந்தி, (க்) ககரமெய்—தோன்றல் சந்தி ; இவ்வாறு முடிந்த தருவிக்கும் என்னும் பகுபதந் தெரிநிலை எதிர் காலப்பெயரெச்சம்.

22. பேறு : பெறு—பகுதி, பெறுதல் என்னும் பதத்திலுள்ள தல்விகுதி கெட்ட மாத்திரத்தில் பகுதி முதனீண்டது ; இவ்வாறு முடிந்த பேறு என் னும் பகுபதம் முதனிலைத் திரிந்த தொழிற்பெயர்.

23. படியாநின்றது : படி—பகுதி, து-தொழிற்பெயர் விகுதி, ஆநின்று-நிகழ்கால இடைநிலை, (அ) அகரம்—சாரியை, (உ) உகரம்—கெடுதல் சந்தி, (ய்) யகரமெய்- தோன்றல் சந்தி ; இவ்வாறு முடிந்த படியாநின்றது என் னும் பகுபதம் தெரிநிலை நிகழ்காலத் தொழிற்பெயர்.

24. படிப்பு : படி—பகுதி, பு—தொழிற்பெயர் விகுதி, (ப்) பகரமெய்-தோன்றல் சந்தி ; இவ்வாறு முடிந்த படிப்பு என்னும் பகுபதந் தெரிநிலை காலங்காட்டாத தொழிற்பெயர்.

25. ஓதுவான் : ஓது—பகுதி, ஆன்—ஆண்பால் படர்க்கை வினைமுற்று விகுதி, (வ்) வகரமெய்—தோன்றல் சந்தி ; இவ்வாறு முடிந்த ஓதுவான் என்னும் பகுபதந் தெரிநிலை தொழிலடியாகப்பிறந்த பெயர் அல்லது பால் காட்டுந் தொழிற் பெயர்.

26. செய்தவன்: செய்—பகுதி, அன்—ஆண்பால் படர்க்கை வினைமுற்று விகுதி, (த்) தகரமெய்—இறந்தகால இடைநிலை, (அ) அகரம்—சாரியை, (வ்) வகரமெய் தோன்றல் சந்தி; இவ்வாறு முடிந்த **செய்தவன்** என்னும் பகுபதந் தெரிநிலை இறந்தகால வினையாலணையும் பெயர்.

---

## குறிப்பு வினைப் பகுபதம்.

27. உண்டு : உள்—பகுதி, டு—குறிப்பு வினைமுற்று விகுதி, (ள்—ட்) ளகரமெய் டகரமெய்யானது—திரிதல் சந்தி, (ட்—ண்) டகரமெய் ணகரமெய்யானது—மெலித்தல் விகாரம்; இவ்வாறு முடிந்த **உண்டு** என்னும் பகுபதம் உடன்பாட்டுக் குறிப்பு வினைமுற்று.

28. பொருட்டு : பொருள்—பகுதி, டு—குறிப்பு வினைமுற்றுவிகுதி, (ள்—ட்) ளகரமெய் டகரமெய்யானது திரிதல் சந்தி; இவ்வாறு முடிந்த **பொருட்டு** என்னும் பகுபதம் உடன்பாட்டுக் குறிப்பு வினைமுற்று.

29. மெல்ல : மென்மையின் விகாரமாகிய மெல்—பகுதி, (அ) அகரம்—குறிப்பு வினையெச்சவிகுதி, (ல்) லகரமெய்—தோன்றல் சந்தி ; இவ்வாறு முடிந்த மெல்ல என்னும் பகுபதம் உடன்பாட்டுக் குறிப்பு வினையெச்சம்.

30. இளைய : இளமை—பகுதி, (அ) அகரம்—பெயரெச்ச விகுதி, மை—கெடுதல் சந்தி, (ய்) யகரமெய்—தோன்றல் சந்தி; இவ்வாறு முடிந்த **இளைய** என்னும் பகுபதம் உடன்பாட்டுக் குறிப்புப் பெயரெச்சம்.

31. உரிமை : உரி—பகுதி, மை—தொழிற் பெயர் விகுதி; இவ்வாறு முடிந்த **உரிமை** என்னும் பகுபதம் உடன்பாட்டுக் குறிப்புத் தொழிற்பெயர்.

32. உள்ளவன் : உள்—பகுதி, அன்—ஆண்பால் படர்க்கை விகுதி, (அ) அகரம்—சாரியை, (ள்) ளகரமெய்—தோன்றல் சந்தி, (வ்) வகரமெய்—தோன்றல் சந்தி; இவ்வாறு முடிந்த **உள்ளவன்** என்னும் பகுபதம் உடன்பாட்டுக் குறிப்பு வினையாலணையும் பெயர்.

---

## எதிர்மறைத் தெரிநிலை வினைப்பகுபதம்.

(எதிர்மறை எதிர்காலத்தில் மாத்திரம் வரும்.)

33. படியேன் : * **படி**—பகுதி, ஏன்—தன்மையொருமை வினைமுற்று விகுதி, (ய்) யகரமெய்—தோன்றல் சந்தி, (எதிர்மறை (ஆ) ஆகாரம் புணர்ந்து கெட்டது.) இவ்வாறு முடிந்த **படியேன்** என்னும் பகுபதந் தெரிநிலை எதிர்மறை தன்மை யொருமை வினைமுற்று.

34. படியோம் : **படி**—பகுதி, ஓம்—தன்மைப்பன்மை வினைமுற்று விகுதி, (ய்) யகரமெய் தோன்றல் சந்தி. (எதிர்மறை (ஆ) ஆகாரம் புணர்ந்து கெட்டது); இவ்வாறு முடிந்த **படியோம்** என்னும் பகுபதந் தெரிநிலை எதிர்மறை தன்மைப் பன்மை வினைமுற்று.

* வருமொழி (விகுதி) முதலெழுத்து நெடிலுயிராயிருக்குமாயின் எதிர்மறை ("ஆ") ஆகாரம்புணர்ந்து கெட்டுவரும்.

35. படியாய் : **படி**—பகுதி, **ஆய்**—முன்னிலை யொருமைவினைமுற்று விகுதி, **(ய்)** யகரமெய்—தோன்றல் சந்தி எதிர்மறை **(ஆ)** ஆகாரம் புணர்ந்து கெட்டது); இவ்வாறு முடிந்த **படியாய்** என்னும் பகுபதந் தெரிநிலை எதிர்மறை முன்னிலை யொருமை வினைமுற்று.

36. படியீர் : **படி**—பகுதி, **ஈர்**—முன்னிலைப்பன்மை வினைமுற்று விகுதி, **(ய்)** யகரமெய்—தோன்றல் சந்தி, எதிர்மறை **(ஆ)** ஆகாரம் புணர்ந்து கெட்டது); இவ்வாறு முடிந்த **படியீர்** என்னும் பகுபதந் தெரிநிலை எதிர்மறை முன்னிலைப் பன்மை வினைமுற்று.

37. படியான் : **படி**—பகுதி, **ஆன்**—ஆண்பால் படர்க்கைவினைமுற்று விகுதி, **(ய்)** யகரமெய்—தோன்றல் சந்தி, (எதிர்மறை **(ஆ)** ஆகாரம் புணர்ந்து கெட்டது); இவ்வாறு முடிந்த **படியான்** என்னும் பகுபதந் தெரிநிலை எதிர்மறை ஆண்பால் படர்க்கை வினைமுற்று.

38. படியாள் : **படி**—பகுதி, **ஆள்**—பெண்பால் படர்க்கை வினைமுற்று விகுதி, **(ய்)** யகரமெய்—தோன்றல் சந்தி, (எதிர்மறை **(ஆ)** ஆகாரம் புணர்ந்து கெட்டது); இவ்வாறு முடிந்த **படியாள்** என்னும் பகுபதந் தெரிநிலை எதிர்மறைப் பெண்பால் படர்க்கை வினைமுற்று.

39. படியார் : **படி**—பகுதி, **ஆர்**—பலர்பால் படர்க்கை வினைமுற்று விகுதி; **(ய்)** யகரமெய்—தோன்றல் சந்தி, (எதிர்மறை **(ஆ)** ஆகாரம் புணர்ந்து கெட்டது); இவ்வாறு முடிந்த **படியார்** என்னும் பகுபதந் தெரிநிலை எதிர்மறை பலர்பால் படர்க்கை வினைமுற்று.

40. படியாது: **படி**—பகுதி, **து**—ஒன்றன்பால் படர்கை வினைமுற்று விகுதி, **(ஆ)** ஆகாரம்—எதிர்மறைவிகுதி, **(ய்)** யகரமெய்—தோன்றல் சந்தி; இவ்வாறு முடிந்த **படியாது** என்னும பகுபதந் தெரிநிலை எதிர்மறை ஒன்றன்பால் படர்க்கை வினைமுற்று.

41. படியா : **படி**—பகுதி, **(ஆ)** ஆகாரம்—விகுதி, **(ய்)** யகரமெய்—தோன்றல் சந்தி, (**ஆகார விகுதியே** பலவின்பாலையும் எதிர்மறையையுங்காட்டுகிறது); இவ்வாறு முடிந்த **படியா** என்னும் பகுபதந் தெரிநிலை எதிர்மறை பலவின்பால் படர்க்கை வினைமுற்று.

42. படியாமல் : **படி**—பகுதி, மல்—வினையெச்ச விகுதி, **(ஆ)** ஆகாரம்—எதிர்மறை விகுதி, **(ய்)** யகரமெய்—தோன்றல் சந்தி; இவ்வாறு முடிந்த **படியாமல்** என்னும் பகுபதந் தெரிநிலை எதிர்மறை வினையெச்சம்.

43. படியாத : **படி**—பகுதி, **(அ)** அகரம்—பெயரெச்சவிகுதி, **(த்)** தகரமெய்—எழுத்துப்பேறு, **(ஆ)** ஆகாரம்—எதிர்மறை விகுதி, **(ய்)** யகரமெய்—தோன்றல் சந்தி; இவ்வாறு முடிந்த **படியாத** என்னும் பகுபதந் தெரிநிலை எதிர்மறைப் பெயரெச்சம்.

44. படியா : **படி**—பகுதி, **(ஆ)** ஆகாரம்—எதிர்மறை விகுதி, **(ய்)** யகரமெய் தோன்றல் சந்தி, **(அ)** அகரவுயிர்—பெயரெச்ச விகுதியும், **(த்)** தகரமெய்—எழுத்துப்பேறும் புணர்ந்து கெட்டது; இவ்வாறு முடிந்த **படியா** என்னும் பகுபதந் தெரிநிலை ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சம்.

45. படியாதது : **படி**—பகுதி, து—தொழிற்பெயர் விகுதி, **(அ)** அகரம்—சாரியை, **(த்)** தகரமெய்—எழுத்துப்பேறு, **(ஆ)** ஆகாரம்—எதிர்மறை

விகுதி, (ய்) யகரமெய்—தோன்றல் சந்தி; இவ்வாறு முடிந்த **படியாதது** என்னும் பகுபதந் தெரிநிலை எதிர்மறைக் காலங்காட்டுந் தொழிற்பெயர்.

46. படியாமை : **படி**—பகுதி, மை—தொழிற்பெயர் விகுதி, (ஆ) ஆகாரம் எதிர்மறை விகுதி, (ய்) யகரமெய்—தோன்றல் சந்தி; இவ்வாறு முடிந்த **படியாமை** என்னும் பகுபதந் தெரிநிலை எதிர்மறைக் காலங்காட்டாத தொழிற்பெயர்.

47. படியாதவன் : **படி**—பகுதி, அன்—ஆண்பால் படர்க்கை வினை முற்று விகுதி, (வ்) வகரமெய்—எதிர்கால இடைநிலை, (ஆ) ஆகாரம்—எதிர் மறை விகுதி. (ய்) யகரமெய்—தோன்றல் சந்தி, (அ) அகரம்—சாரியை, (த்) தகரமெய்—எழுத்துப்பேறு; இவ்வாறு முடிந்த **படியாதவன்** என்னும் பகுபதந் தெரிநிலை எதிர்மறை வினையாலணையும் பெயர்.

---

## எதிர்மறைக் குறிப்பு வினைப்பகுபதம்.

48. இல்லை : இல்—பகுதி, ஐ—ஐம்பான் மூவிடங்களுக்கும் பொதுவான விகுதி, (ல்) லகரமெய்—தோன்றல் சந்தி; இவ்வாறு முடிந்த **இல்லை** என்னும் பகுபதம் எதிர்மறைக் குறிப்பு வினைமுற்று.

49. அன்று : அல்—பகுதி, று—விகுதி, (ல்—ற்) லகரமெய் றகரமெய் யானது—திரிதல்சந்தி, (ற்—ன்) றகரமெய் னகரமெய்யானது—மெலித்தல் விகாரம்; இவ்வாறு முடிந்த **அன்று** என்னும் பகுபதம் எதிர்மறைக் குறிப்பு வினைமுற்று.

50. அல்லாமல் : **அல்**—பகுதி, மல்—எதிர்மறைக் குறிப்புவினையெச்ச விகுதி, (ஆ) ஆகாரம்—எதிர்மறை விகுதி, (ல்) லகரமெய்—தோன்றல் சந்தி; இவ்வாறு முடிந்த **அல்லாமல்** என்னும் பகுபதம் எதிர்மறைக் குறிப்பு வினையெச்சம்.

51. அல்லாத : **அல்**—பகுதி, (ஆ)ஆகாரம்—எதிர்மறைவிகுதி, (ல்) லகரமெய்—தோன்றல் சந்தி, (அ) அகரம்—பெயரெச்சவிகுதி, (த்) தகரமெய்—எழுத்துப்பேறு; இவ்வாறு முடிந்த **அல்லாத** என்னும் பகுபதம் எதிர்மறைக் குறிப்புப் பெயரெச்சம்.

52. இல்லாமை : இல்—பகுதி, (ஆ) ஆகாரம்—எதிர்மறை விகுதி, (ல்) லகரமெய்—தோன்றல் சந்தி, மை — தொழிற்பெயர் விகுதி; இவ்வாறு முடிந்த **இல்லாமை** என்னும் பகுபதம் எதிர்மறைக்குறிப்புத் தொழிற்பெயர்.

53. இல்லாதவன் : இல்—பகுதி, (ஆ) ஆகாரம்— எதிர்மறை விகுதி, (ல்) லகரமெய்—தோன்றல் சந்தி, அன்—ஆண்பால் படர்க்கை வினைமுற்று விகுதி, (வ்) வகரமெய்—தோன்றல்சந்தி, (அ) அகரம்—சாரியை, (த்) தகர மெய்—எழுததுப்பேறு; இவ்வாறு முடிந்த **இல்லாதவன்** என்னும் பகுபதம் எதிர்மறைக்குறிப்பு வினையாலணையும் பெயர்

## பெயர்ப் பகுபதம்.

54. பாதி . பகு என்பதின் மரூஉவாகிய பா—பகுதி, தி—தொழிற்பெயர் விகுதி.

55. மீதி : மீது என்பதின் மரூஉவாகிய மீ--பகுதி, தி—தொழிற்பெயர் விகுதி.

56. எச்சம்: எஞ்சு—பகுதி, அம்—வினைமுதற்பொருள்விகுதி,(ஞ்—ச்) ஞகரமெய் சகரமெய்யானது—வலித்தல் விகாரம், (உ) உகரம்—கெடுதல் சந்தி (தொழிலடியாகப் பிறந்தபெயர்)

57. ஒழுக்கம் : ஒழுகு—பகுதி, அம்—தொழிற்பெயர் விகுதி, பகுதி ஒற்று இரட்டியது—விரித்தல் விகாரம், (உ) உகரம்—கெடுதல் சந்தி.

58. அவள் : (அ) அகரம்—சுட்டிடைப்பகுதி, அள்—பெண்பாற்பெயர்விகுதி, (வ்) வகரமெய்—உடம்படுமெய்.

59. கள்ளர் : கள்—பகுதி, அர்—பல்லோர் படர்க்கை விகுதி, (ள்) ளகரமெய்—தோன்றல் சந்தி. (கள்=திருடு)

60. கொழுநன் : கொழு—பகுதி, அன்—ஆண்பாற் படர்க்கை விகுதி, (ந்) நகரமெய்—பெயரிடைநிலை, (பொருளடியாகப் பிறந்த பெயர்)

61. தூண்டில் : தூண்டு—பகுதி, இல்—தொழிற்பெயர் விகுதி, (உ) உகரம்--கெடுதல் சந்தி.

62. மனைவி : மனை—பகுதி, இ—பெண்பால் விகுதி, (வ்) வகரமெய்—பெயரிடைநிலை.

63. உழுநர் : உழு—பகுதி, அர்—பலர்பால் விகுதி, (ந்) நகரமெய்—பெயரிடைநிலை.

64. வலைச்சி : வலை—பகுதி, இ—பெண்பால் விகுதி, (ச்) சகரமெய்—பெயரிடைநிலை, (ச்) சகரமெய்—தோன்றல் சந்தி.

65. கூனி : கூன்—பகுதி, இ—பெண்பால் விகுதி.

66. அறிஞன் : அறி—பகுதி, அன்—ஆண்பால் விகுதி, (ஞ்) ஞகரமெய்—பெயரிடைநிலை.

67. பொன்னன் : பொன்—பகுதி, அன்—ஆண்பால் விகுதி, ன்) னகரமெய்—தோன்றல் சந்தி.

68. நிலத்தன் : நிலம்—பகுதி, அன்—ஆண்பால்விகுதி, அத்து—சாரியை, (ம், அ) மகரமெய்யும் அகரமும்—கெடுதல சந்தி, (உ) உகரம்— கெடுதல் சந்தி.

69. திணிதோளன் : திணிதோள்—பகுதி, அன்—ஆண்பால் விகுதி

70. நன்மை : நல்—பகுதி, மை—பண்புப்பெயர் விகுதி, (ல்—ன்) லகரமெய் னகரமெய்யானது—திரிதல்சந்தி.

---

# * தொழிற்பெயர்.

- முதனிலைத் தொழிற்பெயர்
- முதனிலை பெறுத தொழிற்பெயர்
- முதனிலை திரிந்த தொழிற்பெயர்
- விகுதிபெற்ற தொழிற்பெயர்
  - காலங்காட்டுந் தொழிற்பெயர்
    - இறந்த
    - நிகழ்கால
    - எதிர்கால
  - காலங்காட்டாத் தொழிற்பெயர் அல்லது முக்காலத்துக்கும் பொதுவான தொழிற்பெயர்
  - தொழிலடியாகப் பிறக்கும் பெயர் அல்லது பால்காட்டுந் தொழிற்பெயர்
    - ஆண்பா
    - பெண்
    - பலர்பா
    - ஒன்றன்
    - பலவின்
  - வினையாலணையும் பெயர் அல்லது பாலையுங் காலத்தையுங் காட்டுந் தொழிற்பெயர்
    - ஆண்பா
      - இறந்த
      - நிகழ்கா
      - எதிர்கா
    - பெண்
      - இறந்த
      - நிகழ்கா
      - எதிர்கா
    - பலர்பா
      - இறந்த
      - நிகழ்கா
      - எதிர்கா
    - ஒன்றன்
      - இறந்த
      - நிகழ்கா
      - எதிர்கா
    - பலவின்
      - இறந்த
      - நிகழ்கா
      - எதிர்கா

# METHOD OF CONJUGATING VERBS

## வினைவிகற்ப விலக்கணங் கூறும் விதம்

(CONJUGATION OF VERBS SHOWING THEIR TERMINATIONS)

உடன்பாடு—Affirmative Form.

Indicative Mood.

(இறந்தகால ஒருமை.)

தன்மை யொருமை வினைமுற்றுகள்—உண்டனென், உண்டேன், உண்டனன், உண்டு, வந்து, சென்று.

முன்னிலை யொருமை வினைமுற்றுகள்—உண்டனை, உண்டாய், உண்டி.

ஆண்பாற் படர்க்கை வினைமுற்றுகள்—உண்டனன், உண்டான்.

பெண்பாற் படர்க்கை வினைமுற்றுகள்—உண்டனள், உண்டாள்.

ஒன்றன்பாற் படர்க்கை வினைமுற்றுகள—உண்டது, ஆயிற்று.

(இறந்தகாலப் பன்மை)

தன்மைப் பன்மை வினைமுற்றுகள்—உண்டனம், உண்டாம், உண்டனெம், உண்டேம், உண்டோம, உண்டெம, வந்தும், சென்றும்.

முன்னிலைப் பன்மை வினைமுற்றுகள—உண்டனிர், உண்டீர்.

பலர்பால் படர்க்கை வினைமுற்றுகள்—உண்டனர், உண்டார், உண்ப.

பலவின்பாற் படர்க்கை வினைமுற்று—உண்டன.

(நிகழ்கால ஒருமை.)

தன்மை யொருமை வினைமுற்றுகள்—உண்கின்றனென், உண்கிறேன், உண்கின்றனன்.

முன்னிலை யொருமை வினைமுற்றுகள்—உண்கின்றனை, உண்கிறாய், உண்ணுகிற்றி.

ஆண்பாற் படர்க்கை வினைமுற்றுகள்—உண்கின்றனன், உண்கிறான்.

பெண்பாற் படர்க்கை வினைமுற்றுகள்—உண்கின்றனள், உண்கிறாள்

ஒன்றன்பாற் படர்க்கை வினைமுற்று—உண்கிறது.

(நிகழ்காலப் பன்மை.)

தன்மை பன்மை வினைமுற்றுகள்—உண்கின்றனம், உண்கின்றாம், உண்கின்றனெம், உண்கினறேம், உண்கிறோம்.

முன்னிலைப்பன்மை வினைமுற்றுகள்—உண்கின்றனிர், உண்கிறீர்.

பலர்பாற்படர்க்கை வினைமுற்றுகள்—உண்கின்றனர், உண்கிறார்.

பலவின்பாற் படர்க்கை வினைமுற்று—உண்கின்றன.

(எதிர்கால ஒருமை.)

தன்மை யொருமை வினைமுற்றுகள்—உண்பென், உண்பேன், உண்பன், உண்பல், உண்கு, வருது, சேறு, செய்யமாட்டேன், செய்கிற்பேன்.

முன்னிலை யொருமை வினைமுற்றுகள்—உண்பை, உண்பாய், சேறி, செய்யமாட்டுவாய், செய்கிற்பாய்.

ஆண்பாற் படர்க்கை வினைமுற்றுகள்—உண்பன், உண்பான், உண்ணும், செய்யமாட்டுவான், செய்கிற்பான்.

பெண்பாற் படர்க்கை வினைமுற்றுகள்—உண்பள், உண்பாள், உண்ணும், செய்யமாட்டுவாள், செய்கிற்பாள்.

ஒன்றன்பாற் படர்க்கை வினைமுற்றுகள்—உண்ணும். செய்யமாட்டும். செய்கிற்கும்.

(எதிர்காலப் பன்மை.)

தன்மைப் பன்மை வினைமுற்றுகள்—உண்பம், உண்பாம், உண்பெம், உண்பேம், உண்போம், உண்கும், வருதும், சேறும், செய்யமாட்டுவோம், செய்கிற்போம்.

முன்னிலைப் பன்மை வினைமுற்றுகள்—செய்குவிர், உண்பீர், செய்யமாட்டுவீர், செயகிற்பீர்.

பலர்பாற் படர்க்கை வினைமுற்றுகள்—உண்பர், உண்பார், உண்ப, உண்மார், செய்யமாட்டுவார், செய்கிற்பார்.

பலவின்பாற் படர்க்கை வினைமுற்றுகள்—உண்ணும், செய்யமாட்டும், செய்கிற்கும்.

குறிப்பு.

(a.) உண்டு=உண்டேன், வந்து=வந்தேன், சென்று=சென்றேன், உண்கு=உண்பேன், வருது=வருவேன், சேறு=செல்வேன், சேறி=செல்வாய்; உண்பல்=உண்பேன்; உண்டும்=உண்டோம், வந்தும்=வந்தோம் சென்றும்=சென்றோம், உண்கும்=உண்போம், வருதும்=வருவோம், சேறும்=செல்வோம்.

(b.) 'உம்' விகுதி எதிர்காலத்தைக் காட்டிக்கொண்டு ஆண்பால் பெண்பால், ஒன்றன்பால், பலவின்பால்களுக்குப் பொதுவாய்வரும். அதற்கு செய்யுமென் வாய்பாட்டு வினைமுற்று என்று பெயர்.

---

## Imperative Mood—ஏவல்.

(எதிர்காலம்.)

முன்னிலை யொருமை வினைமுற்றுகள்:—உரை, உரையாய், உரைதி, சென்றீ, சின்மே.

முன்னிலைப்பன்மை வினைமுற்றுகள்:—உரையும், உரைத்திர், உரையீர், உரைமின்.

## குறிப்பு.

(a.) உரையாய், நடவாய் என்பவை முதலிய 'ஆய்' விகுதி குறைந்து 'உரை' 'நட' என பகுதியே ஏவல் ஒருமையாக வருவதும் உண்டு.

(b.) சேன்றீ, நின்மோ என்னும் மொழிகளின் ஈற்றிலுள்ள ஈகார ஏகாரங்கள் விகுதிகளல்ல; 'ஆய்' விகுதி குறைந்த ஏவலில் வரும் முன்னிலையசையாம், இங்கே ஈயும் ஏயும் முறையே றகர வொற்றையும் மகர வொற்றையும் ஊர்ந்துவந்தன. றகரவொற்றும் மகரவொற்றும் எழுத்துப் பேறு. (சேன்றீ = செல்லாய், நின்மே = நில்லாய்)

---

## Optative Mood—வியங்கோள்.

(எதிர்காலஒருமை.)

**தன்மை யொருமை வினைமுற்றுகள்**—வாழ்க, வாழிய, வாழியர், உண்ணல், வாழ்வேனாக, வாழக்கடவேன், வாழட்டும்.

**முன்னிலை யொருமை வினைமுற்றுகள்**—வாழ்க, வாழிய, வாழியர், உண்ணல், வாழ்வாயாக, வாழக்கடவாய்.

**ஆண்பாற்படர்க்கை வினைமுற்றுகள்**—வாழ்க, வாழிய, வாழியர், உண்ணல், வாழ்வானாக வாழக்கடவன், வாழட்டும்

**பெண்பாற் படர்க்கை வினைமுற்றுகள்**—வாழ்க வாழிய, வாழியர், உண்ணல், வாழ்வாளாக, வாழக்கடவள், வாழட்டும்.

**ஒன்றன்பாற்படர்க்கை வினைமுற்றுகள்**—வாழ்க, வாழிய, வாழியர், உண்ணல், வாழ்வதாக, வாழக்கடவது, வாழட்டும்.

(எதிர்காலப்பன்மை.)

**தன்மைப் பன்மை வினைமுற்றுகள்**—வாழ்க, வாழிய, வாழியர், உண்ணல், வாழ்வோமாக, வாழக்கடவோம், வாழட்டும்.

**முன்னிலைப் பன்மை வினைமுற்றுகள்**—வாழ்க, வாழிய, வாழியர், உண்ணல், வாழ்வீராக, வாழக்கடவீர்.

**பலர்பாற்படர்க்கை வினைமுற்றுகள்**—வாழ்க, வாழிய, வாழியர், உண்ணல், வாழ்வாராக, வாழக்கடவர், வாழட்டும்.

**பலவின்பாற்படர்க்கை வினைமுற்றுகள்**—வாழ்க, வாழிய, வாழியர், உண்ணல், வாழ்வனவாக, வாழக்கடவன, வாழட்டும்.

### குறிப்பு.

(a) க, ய, ர், அல், ஒட்டும்—இவ்வைந்தும் பொது வியங்கோள் வினைமுற்று விகுதிகள். ஆக், கட இவ்விரண்டுஞ் சிறப்பு வியங்கோள் வினைமுற்று விகுதிகள், ஆகையால் இவ்விரண்டுந் திணை பால் இடங்களைக் குறிக்கும் விகுதிகளை யேற்றேவரும்.

(b.) வழக்கத்தில் ஒட்டும் என்றும் விகுதி முதல் குறைந்துவரும். உதாரணம்:—அவர் போகட்டும் (போக (ஒ) ட்டும்,) யாம் வரட்டும் (வர(ஒ) ட்டும்). முன்னிலையில் வாக்கியத்தின் இடையிலேமாத்திரம் இவ்விகுதி பெற்ற வியங்கோள் வரும். உதாரணம்:—நீ படிக்கட்டும் என்று நான்பேசா திருந்தேன்.

(c.) ஆ, ஓ, ஏ,—என்னும் ஈற்று வினா இடைச்சொற்கள் பெயருடன் அன்றி வினையுடனுஞ் சேர்ந்துவரும். உதாரணம்:—அவன் வந்தானா? அவன் வருவானோ? அவன் வந்தானே? நான் வரட்டுமா?

---

## Participle Verb—வினையெச்சவினை.

இறந்தகால வினையெச்சவினை—படித்து, ஓடி முதலியன.
நிகழ்கால வினையெச்சவினை—படிக்க, உணற்கு.
எதிர்கால வினையெச்சவினை—படிக்கின், படிக்கில் முதலியன.

---

## Participle Adjective—பெயரெச்சவினை.

இறந்தகாலப் பெயரெச்சவினை—படித்த.
நிகழ்காலப் பெயரெச்சவினை—படிக்கிற.
எதிர்காலப் பெயரெச்சவினை—படிக்கும்.

---

## Verbal Noun—தொழிற்பெயர்.

இறந்தகாலத் தொழிற்பெயர்—படித்தமை, படித்தது.
நிகழ்காலத் தொழிற்பெயர்—படிக்கின்றமை, படிக்கிறது.
எதிர்காலத் தொழிற்பெயர்—படிப்பது, வருவது.
காலங்காட்டாத தொழிற்பெயர்—படித்தல், ஆடல், முதலியன.

### குறிப்பு.

(a.) அம், ஆம், எம், ஏம், ஓம், தும், டும், தும், றும், என்னும் இவ் வொன்பது விகுதிகளையும் இறுதியிலுடைய மொழிகள் இருதிணைப்பொது வாய் வருந் தன்மைப் பன்மை வினைமுற்றுச்சொற்களாயினும், அவை தன் னிலையி னிற்பதன்றி முன்னிலையாரையும் படர்க்கையாரையுந் தன்மையிற் கூட்டுதலுமுண்டு.

(b) அம், ஆம், என்னும் இவ்விருவிகுதியால் வருவன முன்னிலை யாரைத் தன்னோடு கூட்டும்.

உதாரணம்.

நீயும் யானும் ... உண்டனம்.
,, ,, ... உண்டாம்.

(c.) எம், ஏம், ஓம், என்னும் இம்மூன்று விகுதியால் வருவன படர்க்கையாரைத் தன்னோடு கூட்டும்.

உதாரணம்.

அவனும் யானும் ... உண்டனெம்.
,, ,, .. உண்டேம்.
,, ,, ... உண்டோம்.

(d) தும், டும், றும், மும் என்னும் இந்நான்கு விகுதியால் வருவன முன்னிலையாரையும் படர்க்கையாரையும் தன்னோடு கூட்டும்.

உதாரணம்.

நீயும், அவனும், யானும் .. உண்கும்.
,, ,, ,, ... உண்டும்.
,, ,, ,, ... வந்தும்.
,, ,, ,, ... சென்றும்.

(e.) இவ்வொன்பது விகுதியீற்றுமொழிகள் இங்ஙனம் வருதலால் உளப்பாட்டுத் தன்மை வினையெனப்படும்.

(f.) தன்மை வினைமுற்றுகளுள் 'செய்து' என்னுந்தன்மை யொருமை வினைமுற்றுச்சொல்லும் 'செய்தும்' என்னுந் தன்மைப்பன்மை வினைமுற்றுச் சொல்லும் வினையுடனுமுடியும்; அப்போதும் வினைமுற்றேயாம். உதாரணம்:—உண்டு வந்தேன், உண்டும் வந்தேம் என வரும்.

உண்பேன் வந்தேன், உண்பேம், வந்தேம் என மற்றவை வினைகொண்டு முடிதல் மரபு அன்று எனக்கொள்க.

(g.) என், ஏன், அம், ஆம், எம், ஏம், ஓம், ஐ, ஆய், இ, இர், ஈர், மின், ஆன், அள், ஆள், அர், ஆர், து, று, அ, என்னும் விகுதிகளாலும் குறிப்புவினைமுற்றுகள் வரும்.

உதாரணம்.

யான் — தாரினன், தாரினேன்.
யாம் — தாரினம், தாரினும், தாரினெம், தாரினேம், தாரினோம்.
நீ — வில்லினை, வில்லாய், வில்லி.

நீர் — குழையினிர், குழையீர்.
நம்பி — குழையினன், குழையான்.
நங்கை — குழையினள், குழையாள்.
அவர் — குழையர், குழையார்.
அது — அணித்து. அற்று.
அவை — இல்லன, இல்ல.

யான் தாரினேன்=யான் மாலையை யுடையவன், நம்பி குழையான்=நம்பி குண்டலத்தை யுடையவன், அது அணித்து=அது சமீபத்தையுடையது. அது அற்று=அது அத்தன்மையையுடையது.

(*h*) அம், ஆம் எம், ஏம், ஓம் என்னும் தன்மைப் பன்மை வினைக் குறிப்பும் உளப்பாட்டில் வரும். உதாரணம்:—நீயும் யானும் தாரினம், அவனும் யானும் தாரினெம் எனவரும்.

(*i*) டுவ் விகுதியை ஈற்றிலுடைய மொழி அஃறிணை யொன்றன்பாற் படர்க்கைக் குறிப்புவினைமுற்றாம். உதாரணம:—அது பொருட்டு, அது ஆதிரைநாட்டு, அது குண்டு கட்டு.

அது பொருட்டு=அது பொருளையுடையது. அது ஆதிரைநாட்டு=அது ஆதிரைநாளையுடையது. அது குண்டுகட்டு=அது ஆழமானகண்ணையுடையது.

---

## எதிர்மறை—NEGATIVE FORM.

(எதிர்மறை எதிர்காலத்தில் மாத்திரம் வரும்.)

### எதிர்கால ஒருமை.

தன்மையொருமை வினைமுற்றுகள்—செய்யேன், செய்யமாட்டேன், செய்கிறதில்லேன், செய்கிற்கலேன், செய்கிலேன், செய்கலேன்.

முன்னிலையொருமைவினைமுற்றுகள்—செய்யாய், செய்யமாட்டாய், செய்கிற்கிலாய், செய்கிற்கலாய், செய்கிலாய், செய்கலாய்.

ஆண்பாற்படர்க்கை வினைமுற்றுகள்—செய்யான், செய்யமாட்டான், செய்கிற்கிலான், செய்கிற்கலான், செய்கிலான், செய்கலான்.

பெண்பாற்படர்க்கைவினைமுற்றுகள்—செய்யாள், செய்யமாட்டாள், செய்கிற்கிலாள், செய்கிற்கலாள், செய்கிலாள், செய்கலாள்.

ஒன்றன்பாற்படர்க்கை வினைமுற்றுகள்—செய்யாது, செய்யமாட்டாது, செய்கிற்கிலது, செய்கிற்கலது, செய்கிலது, செய்கலது.

### எதிர்காலப் பன்மை.

தன்மைப்பன்மை வினைமுற்றுகள்—செய்யோம், செய்யமாட்டோம், செய்கிற்கிலோம், செய்கிற்கலோம், செய்கிலோம், செய்கலோம்.

முன்னிலைப்பன்மை வினைமுற்றுகள்—செய்யீர், செய்யமாட்டீர், செய்கிற்கிலீர், செய்கிற்கலீர், செய்கிலீர், செய்கலீர்.

பலர்பாற்படர்க்கை வினைமுற்றுகள்—செய்யார், செய்யமாட்டார், செய்கிற்கிலார், செய்கிற்கலார், செய்கிலார், செய்கலார்.

பலவின்பாற் படர்க்கை வினைமுற்றுகள்—செய்யா, செய்யமாட்டா, செய்கிற்கில, செய்கிற்கல, செய்கில, செய்கல.

---

## ஏவல்.

முன்னிலையொருமை வினைமுற்றுகள்—செய்யேல், செய்யல், செய்யாதே. (செய்யாதை என்பதின் மரூஉ செய்யாதே.)

முன்னிலைப்பன்மை வினைமுற்றுகள்—செய்யன்மின், செய்யாதேயும்.

---

## வியங்கோள் ஒருமை.

தன்மையொருமை வினைமுற்றுகள்—செய்யேனாக, செய்யற்க.

முன்னிலையொருமை வினைமுற்றுகள்—செய்யாயாக, செய்யற்க.

ஆண்பாற்படர்க்கை வினைமுற்றுகள்—செய்யானாக, செய்யற்க.

பெண்பாற்படர்க்கை வினைமுற்றுகள்—செய்யாளாக, செய்யற்க.

ஒன்றன்பாற்படர்க்கை வினைமுற்றுகள்—செய்யாதாக, செய்யற்க.

## வியங்கோட் பன்மை.

தன்மைப்பன்மை வினைமுற்றுகள்—செய்யோமாக, செய்யற்க.

முன்னிலைப்பன்மை வினைமுற்றுகள்—செய்யீராக, செய்யற்க.

பலர்பற்படர்க்கை வினைமுற்றுகள்—செய்யாராக, செய்யற்க.

பலவின்பாற்படர்க்கை வினைமுற்றுகள்—செய்யாவாக, செய்யற்க.

குறிப்பு:...உடன்பாட்டில் வரும் வியங்கோள் விகுதிகளில் ஆக என்னும் சிறப்பு விகுதியும், க என்னும் பொது விகுதியும் எதிர்மறையிலும் வரும்.

---

எதிர்மறை வினையெச்சவினை—படியாமல், படியாமே, படியாமை, படியாது.

---

எதிர்மறைப் பெயரெச்சவினை—படியாத.

---

எதிர்மறைத் தொழிற்பெயர்—நடவாமை.

## அப்பியாசம்.

### உண் என்கிற பகுதியடியாக வரும் வினைகளையும் பெயர்களையும் விளம்புக.

உண் ... ... ... ... முதனிலை

| | | |
|---|---|---|
| உண்டேன் ... ... ... ... | தன்மை யொருமை | இறந்தகால வினைமுற்று. |
| உண்டோம் ... ... ... ... | தன்மைப் பன்மை | |
| உண்டாய் ... ... ... ... | முன்னிலையொருமை | |
| உண்டீர் ... ... ... | முன்னிலைப் பன்மை | |
| உண்டான் ... ... ... | படர்க்கை ஆண்பால் | |
| உண்டாள் ... ... ... | படர்க்கைப் பெண்பால் | |
| உண்டார் ... ... ... | படர்க்கைப் பலர்பால் | |
| உண்டது ... ... ... | படர்க்கை ஒன்றன்பால் | |
| உண்டன ... ... ... | படர்க்கைப் பலவின்பால் | |
| உண்கிறேன் ... ... ... ... | தன்மை யொருமை | நிகழ்கால வினைமுற்று. |
| உண்கிறோம் ... ... ... ... | தன்மைப் பன்மை | |
| உண்கிறாய் ... ... ... | முன்னிலை யொருமை | |
| உண்கிறீர் ... ... ... | முன்னிலைப் பன்மை | |
| உண்கிறான் ... ... ... | படர்க்கை ஆண்பால் | |
| உண்கிறாள் ... ... ... | படர்க்கைப் பெண்பால் | |
| உண்கிறார் ... ... ... | படர்க்கைப் பலர்பால் | |
| உண்கிறது ... ... ... | படர்க்கை ஒன்றன்பால் | |
| உண்கின்றன ... ... | படர்க்கைப்பலவின்பால் | |
| உண்பேன் ... ... ... ... | தன்மை யொருமை | எதிர்கால வினைமுற்று. |
| உண்போம் ... ... ... ... | தன்மைப் பன்மை | |
| உண்பாய் ... ... ... | முன்னிலை யொருமை | |
| உண்பீர் ... ... ... ... | முன்னிலைப் பன்மை | |
| உண்பான் ... ... ... ... | படர்க்கை ஆண்பால் | |
| உண்பாள் ... ... ... | படர்க்கைப் பெண்பால் | |
| உண்பார் ... ... ... ... | படர்க்கைப் பலர்பால் | |
| உண்ணும் ... ... ... | படர்க்கை ஒன்றன்பால் | |
| உண்ணும் ... ... ... | படர்க்கைப் பலவின்பால் | |

உண் உண்ணாய் ... ... ஏவல் ஒருமை வினைமுற்றுகள்.
உண்ணும், உண்மின் ... ... ஏவற்பன்மை வினைமுற்றுகள்.
உண்க ... ... ... வியங்கோள் வினைமுற்று.
உண்டு, உண்ண, உண்கில் ... ... ... வினையெச்சங்கள்.
உண்ட, உண்கிற, உண்ணும் ... ... ... பெயரெச்சங்கள்.
உண் என்கிற பகுதிக்கு முதனிலைத் தொழிற்பெயரில்லை.*

---

*முதனிலை பெறாத தொழிற்பெயர்கள் தெரிநிலை வினைப்பகுதியடியாக வாரா. (உதாரணம்.)

கூத்து, சண்டை, வேட்டை, பசி, பட்டினி, சூது, கோள், வாது, வஞ்சனை, மோசம், வினை, தொழில், தாள், அமர், தூது, வேலை, தொண்டு, செட்டுமுதலியவை முதனிலை பெறாததொழிற்பெயர் எனப்படும்.

உதாரணம்.

ஊண் ... ... ... ... முதனிலை திரிந்ததொழிற்பெயர்.
உண்டது, உண்கிறது, உண்பது...காலங்காட்டுந் தொழிற்பெயர்கள்.
உண்ணல் ... ... ... காலங்காட்டாத தொழிற்பெயர்.
ஊணன் . . ... ... தொழிலடியாகப்பிறந்தபெயர்.
உண்டவன், உண்கிறவன், உண்பவன்—வினையாலணையும் பெயர்கள்.

கவனிப்பு :—ஆகார வினையடியாக வரும் வினைகளுந் தொழிற்பெயர்களுந் தனியே வராமல், பெயரையே யடுத்து வரும் என்றறிக.

*N. B*—For the rules for these tenses, &c., refer to Grammar.

---

## ON LETTERS.

### எழுத்திலக்கணக்குறிப்பு.

1. Letters : தமிழெழுத்து உயிர், மெய், ஆய்தம், உயிர்மெய் யென நான்குவகைப்படும்.

2. Vowels. உயிர் பன்னிரண்டு:—அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ, ஓ, ஔ. இவை குறில் நெடிலென இருவகைப்படும். (உயிர், ஆவி என்பன ஒருபொருட்சொற்கள். உயிர்க்கு வடநூலார் அச்சு அல்லது சுரம் என்பர்.)

(*a*) Short Vowels. குற்றெழுத்து ஐந்து:—அ, இ, உ, எ, ஒ. (இவை குறில் எனவும், குறுமை யெனவும் பெயர் பெறும். குறிற்கு வடநூலார் இரச்சுவம் என்பர்.

(*b*) Long Vowels. நெட்டெழுத்து ஏழு—ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ. (இவை நெடில் எனவும், நெடுமை எனவும் பெயர் பெறும். நெடிற்கு வடநூலார் தீர்க்கம் என்பர்.)

குறிப்பு:—“ஐ” “ஔ” இவ்விரண்டும் இணையுயிர்கள் எனவும்படும். அகரக்கூறும் இகரக்கூறுஞ்சேர்ந்து ஐகாரமாம்; அகரக்கூறும் உகரக்கூறுஞ்சேர்ந்து ஔகாரமாம். (அ+இ=ஐ, அ+உ=ஔ.)

3. Consonants. மெய் பதினெட்டு:—க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ழ், ள், ற், ன். இவை வல்லினம், மெல்லினம், இடையினம் என மூவகைப்படும். (மெய், ஒற்று, உடல்,

உடம்பு, புள்ளி, என்பன ஒருபொருட்சொற்கள். மெய்க்கு வடநூலார் அல் அல்லது வியஞ்சனம் என்பர்.

(a) Hard Consonants. வல்லெழுத்து ஆறு:—க், ச், ட், த், ப், ற். (இவை வலி, வன்மை, வல்லினம், வன்கணம் எனவும் படும். வலிக்குவடநூலார் சய் அல்லது பர்சம் என்பர்.)

(b) Soft Consonants or Nasals. மெல்லெழுத்து ஆறு:—ங், ஞ், ண், ந், ம், ன். (இவை மெலி, மென்மை, மெல்லினம், மென்கணம் எனவும் படும். மெலிக்கு வடநூலார் அநுநாசிகா அல்லது பர்சம் என்பர்.)

*N. B.*—ண், ந், ன், இம்மூன்று எழுத்துகளுக்கும் டண்ணகரம், தன்னகரம், றன்னகரம் என இலக்கணிகள் பெயரிட்டிருக்கின்றனர்.

(c) Medial Consonants (neither hard nor soft). இடையெழுத்து ஆறு:—ய், ர், ல், வ் ழ், ள். (இவை இடை, இடைமை, இடையினம், இடைக்கணம் எனவும்படும். இடைக்கு வடநூலார் அந்தத்தக்கரம் அல்லது யண் என்பர்.)

கவனிப்பு:—தமிழில் "பதினெண்" மெய்களுண்டென்று இலக்கணிகள் கணக்கிட்டிருந்தாலும், வல்லினத்தின் பலவித உச்சரிப்புகளைக்கவனிக்கும்போது, மெய்யெழுத்து "முப்பத்திமூன்றென்று" சொல்லலாம். சமஸ்கிருத பாஷையில் ஒவ்வொரு உச்சரிப்புக்கும் பிரத்தியேகமான எழுத்திருப்பதுபோல் தமிழில் இல்லாவிடினும், அடியிற்கண்டிருக்கும் மொழிகளில் மெய்யெழுத்துகளின் பலவிதஉச்சரிப்புகளை வரிசை கிரமப்படுத்திக் காட்டியிருக்கின்றோம். அவற்றைப் பிள்ளைகளின் நாவிற்கு பழக்கமுண்டாகும்படி ஒலிவடிவிலேயாவது உச்சரிக்கப் பழக்கிவரவேண்டும்.

## மெய்யெழுத்தின் பலவித உச்சரிப்பு.

க் — கடி, பக்கம், பகல், தங்கம்
ங் — அங்ஙனம்
ச் — தச்சன், சதை, மஞ்சன்
ஞ் — ஞண்டு
ட் — பட்டம், படம், பண்டம்

ண் — பணம்
த் — தலை, சுத்தம், அதனால், மந்தன்
ந் — நலம்
ப் — படி, அப்பம், கோபம், கம்பன்
ம் — மனசு

ய் — அயல்
ர் — கரம்
ல் — பலம்
வ் — அவன்
ழ் — பழம்
ள் — களம்
ற் — அறம், கற்றவன், சென்ற
ன் — கனவு

N. B.—இவற்றின் விவரங்களைக் குறித்து வல்லினத்தின் பலவித உச்சரிப்புகளைக் காட்டும் அட்டவணையிற் காண்க.

4. Gutturals. ஆய்தமாவது சிலவிடத்தில் உயிர்போலவுஞ் சில விடத்தில் மெய்போலவும் ஒலித்து உயிருமாகாமல் மெய்யுமாகாமல் தனிநிலையாய் வருகிற ஓர் எழுத்தாம். அதற்கு வடிவு (ஃ) மூன்று புள்ளி. (ஆய்தம், அஃகேனம், முப்புள்ளி, ஒற்று, தனிநிலை என்பன ஒரு பொருட்சொற்கள்.)

5. Vowel-Consonants. உயிர்மெய்யெழுத்தாவது உயிரும் மெய்யுங்கூடிப் பிறக்கும் எழுத்து ; அது பதினெட்டு மெய்யின்மேலும் பன்னிரண்டு உயிருந் தனித்தனி யேறிவர இருநூற்றுப்பதினாறாகும்.

(உ-ம்.) ககரமெய்யின்மேல் அகரம் ஏற (க) எனவும் ஆகாரம் ஏற (கா) எனவும் வரும். மற்றவையும் இவ்வாறே.

குறிப்பு:—ஒற்றொலிமுன்னும் உயிரொலி பின்னுமாகி உயிர்மெய்யெழுத்து பிறக்கும். (உ-ம்) க்+அ=க, க்+ஆ=கா மற்றவையும் இவ்வாறே.

6. Production of letter sounds. உயிரெழுத்தும் இடையெழுத்துங் கழுத்திற் பிறக்கும். வல்லெழுத்து மார்பிற் பிறக்கும். மெல்லெழுத்து மூக்கிற் பிறக்கும். ஆய்தம் தலையிற் பிறக்கும். சார்பெழுத்துகள் தம்முதலெழுத்துகளோ டொப்பனவாய்ப் பிறக்கும்.

7. Organs of Speech. எழுத்துகள் உதடு, நாக்கு, பல், அண்ணம் ஆகிய நான்கின் தொழிலால் உச்சரிக்கப்படும்.

8. Kindred Letters. இனவெழுத்துகள் :—உயிரெழுத்துகளில் நெட்டெழுத்துகளுக்கு அதனதன் குற்றெழுத்துகளே யினமாம். குற்றெழுத்தில்லாத ஐகாரத்துக்கு இகரமும், ஔகாரத்துக்கு உகரமும் இனமாம். மெய்யெழுத்துகளில் வல்லெழுத்துகளுக்கு அதனதன் பின்னிற்கின்ற மெல்லினவெழுத்துகளே யினமாம். இடையினம் ஆறும் ஓரினம் எனவும்படும்.

9. Demonstrative Letters. சுட்டெழுத்து:—அ, இ, உ இம்மூன்றும் சொல்லுக்கு முதலில் அகத்துறுப்பாகவேனும் புறத்துறுப்பாகவேனும் நின்று சுட்டுப்பொருளை யுணர்த்திவரின் சுட்டெழுத்தாம்.

(உ-ம்.) அவன், இவன், உவன்—அகத்து வந்தன. அக்கொற்றன், இக்கொற்றன், உக்கொற்றன்—புறத்து வந்தன. அகரந் தூரத்திலிருக்கிற பொருளையும், இகரஞ் சமீபத்திலிருக்கிற பொருளையும், உகரம் இரண்டுக்கு மத்தியிலிருக்கிற பொருளையுஞ் சுட்டுதற்கு வரும்.

குறிப்பு:—சுட்டெழுத்துகள் இடைச்சொல்லை யடுத்துவரும்போது அகத்துறுப் பாம்; பெயர்ச்சொல்லை யடுத்து வரும்போது புறத்துறுப்பாம். (அவன்—சுட்டடியாகப் பிறந்தபெயர். அப்பையன்—சுட்டடுத்து வந்தபெயர்.)

10. சுட்டெழுத்து மூன்றுந் திரிந்தும் வரும். (உ-ம்) அ+பையன்=அந்தப் பையன், இ+பையன்=இந்தப்பையன் உ+பையன் =உந்தப்பையன்.

11. Interrogative Letters. வினாவெழுத்து:—ஆ, எ, ஏ, ஓ, என்னும் உயிரெழுத்துகளும், "யா" என்னும் உயிர்மெய்யெழுத்தும் ஆகிய இவ்வைந்தும் வினாப்பொருளை யுணர்த்தினவாயின் வினாவெழுத்தாம். அவற்றுள் எகரமும் யாவும் மொழிக்கு முதலில் புறத்துறுப்பாகவேனும் அகத்துறுப்பாகவேனும் வரும். ஆகாரமும் ஓகாரமும் மொழிக்கு ஈற்றில் புறத்துறுப்பாகவே வரும். ஏகாரம் மொழிக்கு முதலில் அகத்துறுப்பாகவும், ஈற்றில புறத்துறுப்பாகவும்வரும்.

(உ-ம்.) எக்கொற்றன் ?, எவன் ?; யாங்ஙனம் ?, யாவன் ?– எகரமும் யாவும் முதலிலே புறத்தும் அகத்தும் வந்தன. மகனா ? மகனோ ?—ஆகாரமும் ஓகாரமும் ஈற்றிலே புறத்து வந்தன. ஏது ? கொற்றனே ?—ஏகாரம் முதலில் அகத்தும் ஈற்றில் புறத்தும் வந்தது.

குறிப்பு:—வினாவெழுத்துகளில் எகர மாத்திரந் திரிந்தும் வரும். (உ-ம்) எ+பையன்=எந்தப்பையன்.

12. உகரம் மாத்திரையின் சுருக்கத்தாலும் இயல்பாலும் குற்றியலுகரம், முற்றியலுகரம் என இருவகைப்படும்.

13. Abbreviated உ. குற்றியலுகரம்:—ஒரு குறிலினாலும் இரண்டு குறிலினாலும் ஆக்கப்படாத மொழியிறுதிவல்லின மெய்யின் மேல் ஏறிய உகரம் குற்றியலுகரம் எனப்படும். (குற்றியலுகரம், குற்றுகரம், உகரக்குறுக்கம் என்பன ஒரு பொருட்சொற்கள்.

14. அது ஈற்றெழுத்துக்கு அயலெழுத்தை நோக்கி நெடிற்றொடர், உயிர்த்தொடர், வன்றொடர், மென்றொடர், இடைத்தொடர், ஆய்தத்தொடர் என அறுவகையாம்.

(உ-ம்). நாகு, ஈறு, கூடு—நெடிற்றொடர்; வரகு, பலாசு,உருபு—உயிர்த்தொடர்; கொக்கு, கச்சு, பட்டு—வன்றொடர்; சங்கு பஞ்சு, துண்டு—மென்றொடர்; செய்து, சார்பு, சால்பு—இடைத்தொடர்; எஃகு, பஃது—ஆய்தத்தொடர்.

குறிப்பு.

(a) குற்றியலுகரமானது நெடிலேழையுஞ் சொல்லுக்கு நடுவிலும் கடையிலும் வாராத ஔகாரம் நீங்கிய பதினொரு உயிரையும், வல்லெழுத்தாறையும், மெல்லெழுத்தாறையும், வல்லெழுத்துகளோடு தொடராத வகரம் நீங்கிய இடையெழுத்தைந்தையும்; ஆய்தம் ஒன்றையுந் தொடர்ந்தவகையால் முப்பத்தாறாகும். அன்றியும், நுந்தை என்னும் சொல்லிலே நகரமெய்யிலிருக்கிற உகரமும் குற்றியலுகரம் என்னப்படும். நுந்தை (நும் + தந்தை) = உம்முடையதந்தை.

(b) நெடிற்றொடர் முதலில் நெட்டெழுத்தைப்பெற்று இரண்டெழுத்து மொழியாகவே வரும். (உ-ம் பாடு; ஆறு.

(c) உயிர்த்தொடர் ஈற்றுக்கு அயலில் உயிரெழுத்தைப்பெற்று இரண்டிற்கு மேற்பட்ட எழுத்துகளால் ஆகிவரும். (உ-ம்) மெழுகு, பாலாறு.

15. முற்றியலுகரம்:—தனித்துந் தனிக்குறிலைச் சேர்ந்தும் வரும் வல்லின மெய்யின்மேலும், தனித்துந் தொடர்ந்தும்வரும் மெல்லின இடையின மெய்களின்மேலும் வரும் உகரம் முற்றியலுகரமாம்.

(உ-ம்) கு, து; நடு, பசு; யு, நு; தாணு, கதவு. (முற்றியலுகரத்தை முற்றுகரம் எனவுங் கூறுவர்.)

16. Abbreviated இ. குற்றியலிகரம் —நிலைமொழியீற்றுக் குற்றியலுகரங்கள் வருமொழி முதலில் யகரம் வருமாயின் இகரமாய்த்திரியும். இவற்றோடு "மியா" என்னும் முன்னிலை அசைச்சொல்லிலிருக்கின்ற இகரத்தைக்கூட்டக் குற்றியலிகரம் முப்பத்தேழாம்.

(உ-ம்) நாகு + யாது = நாகியாது, எஃகு + யாது = எஃகியாது, வரகு + யாது = வரகியாது; கேண்மியா, சென்மியா.

17. Prolongation of sounds. அளபெடை:—செய்யுளில் ஓசைகுறைந்தவிடத்து எழுத்தை நீட்டிச்சொல்வதே அளபெடையாம். அது உயிரளபெடை ஒற்றளபெடையென இருவகைப்படும். உயிரளபெடை இருபத்தொன்று;

(உ-ம்) வாஅகை, படாஅகை, கடாஅ, ஆஉே, எடுப்பதூஉம், நசைஇ. ஒற்றளபெடைநாற்பத்திரண்டு; (உ-ம்)அரங்ங்கம், மங்ங்கலம், மடங்ங், நங்ங். (அளபெடையை அளபு எனவுங் கூறுவர். வடநூலார் புலுதம் என்பர்.)

18. Measurement of Time or Quantity of Letters. எழுத்துகளின் மாத்திரை:—மனிதருடைய கண்ணிமைப்பொழுது அல்லது கைந்நொடிப்பொழுது ஒருமாத்திரை என்னப்படும். உயிரளபெடைக்கு மாத்திரை மூன்று; நெடிலுக்கு மாத்திரை இரண்டு; குறிலுக்

கும், ஒற்றளபெடைக்குந் தனித்தனி மாத்திரை ஒன்று; ஒற்றுக்கும், குற்றியலுகரத்திற்கும், குற்றியலிகரத்திற்கும், ஆய்தத்திற்குந் தனித்தனி மாத்திரை அரை; உயிர்மெய்க்கு மெய் மாத்திரையொழிய ஏறிய உயிர்மாத்திரையே மாத்திரையாம்.

குறிப்பு:—பண்டமாற்றிலும், விளியிலும், இசையிலும், புலம்பலிலும் உயிரெழுத்தும் மெய்யெழுத்தும் தமக்குச்சொன்ன அளவைக்கடந்து நீண்டொலிக்கும்.

---

## Sanscrit Letters. வடவெழுத்துகள்.

19. அனேக வடமொழிகள் தொன்று தொட்டுத் தமிழ்ப் பாஷையிற் கலந்து வழங்கப்பட்டு வருவதினால் அவைகளைச் சரியானபடி உச்சரிக்கும் பொருட்டு அப்பாஷைக்கே யுரித்தான சிலவெழுத்துகள் தமிழில் வழங்கப் பட்டுவருகின்றன. [illegible].

20. உயிரெழுத்து பதினாறு:—అ ఆ [illegible] ఋ ౠ ఌ ౡ ఎ ఏ ఐ ఒ ఓ ఔ అం అః [illegible]

21. மெய்யெழுத்து முப்பத்தேழு:—క ఖ గ ఘ ఙ చ ఛ జ ఝ ఞ ట ఠ డ ఢ ణ త థ ద ధ న ప ఫ బ భ మ య ర ల వ శ ష స హ ళ క్ష ఱ ఴ

22. உயிரெழுத்துப் பதினாறுள் அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஐ, ஒ, ஔ என்னும் பத்தும்; மெய்யெழுத்து முப்பத்தேழுள் க், ங், ச், ஞ், ட், ண், த், ந், ப், ம், ய், ர், ல், வ், ள். என்னும் பதினைந்தும் ஆகிய இருபத்தைந்தும் ஆரியத்திற்குந் தமிழிற்கும் பொது எழுத்துகளாம்.

23. உயிரெழுத்துகளுள் அப்பத்தொழிந்த ஆறும் (ఋ ౠ, ఌ ౡ అం అః) மெய்யெழுத்துகளுள் அப்பதினைந்து ஒழிந்த இருபத்திரண்டும் (ఖ గ ఘ ఛ జ ఝ ఠ డ ఢ థ ద ధ ఫ బ భ శ ష స హ క్ష ఱ ఴ) ஆகிய இருபத்தெட்டும் ஆரியத்திற்கேயுரிய சிறப்பெழுத்துகளாம்.

24. ஆரியத்திற்கேயுரிய இருபத்திரண்டு மெய்யெழுத்துகளில் தமிழில் வழங்கிவரும் எழுத்துகள் ஐந்து; அவையாவன:—ஸ, ஷ, க்ஷ, ஜ, ஹ. (ష స క్ష జ హ)

கவனிப்பு:—(a) சமஸ்கிருத எழுத்துகளின் உச்சரிப்பைத் தெலுங்கு எழுத்துகளால் இங்கே காட்டியிருக்கின்றோம்.

(b) சமஸ்கிருதபாஷைக்குரிய பல உச்சரிப்புகளைத் தமிழ் எழுத்துகளால் எவ்வாறு உச்சரிக்கமுடியாதோ, அவ்வாறே தமிழ் மொழிக்குரிய சில உச்சரிப்புகளையும் சமஸ்கிருத எழுத்துகளால் உச்சரிக்க முடியாதென்று அறிக.

## * DIFFERENT SOUNDS OF THE HARD LETTERS.

### வல்லினத்தின் பலவித உச்சரிப்பு.

க்

ககரம் மொழிமுதலில் (ඝ) என்னும எழுததை யொததொலிக்கும். (உ-ம்.) கடி. (ඝ = k.)

ககரம் ககர, டகர, றகர மெயகளுககுபபின வருமாயின (ඝ) என்னும் எழுத்தைப்பார்ககிலுஞ் சற்று வலிநது ஒலிககும. (உ-ம.) பக்கம், வெட்கம், அதற்த.

ககரம் மொழி இடையிலும கடையிலும (ඝ) எனனும எழுததைபபாரக கிலுஞ் சற்று மெலிந்து ஒலிககும (உ-ம.) பகல், விறத.

ஞகர, ணகர மெய்களுக்குப்பின்

ககரம் ஙகர, வருமாயின் (ᚷ) என்னும எழுத்தை யொத் தொலிக்கும. (உ-ம.) தங்கம், தாங்கு, ஆண்கள். ங = g soft.

ச்

சகரம் சகர, டகர, றகர, மெய்களுககுபபின வருமாயின (ඡ) எனனும எழுத்தை யொத்தொலிககும. (உ-ம.) தச்சன், கட்சாடி, போற்சாடி, ඡ = ch soft.

சகரம் மொழி முதலிலும, இடையிலும, கடையிலும (ස) எனனும எழுத்தை யொததொலிககும. (உ-ம,) சதை, பசுமை, ஆசை. ස = S.

சகரம் ஞகர மெய்க்குபபின வருமாயின (ජ) எனனும எழுததை யொத தொலிககும. (உ-ம.) மஞ்சள். ජ = j.

ட்

டகரம் மொழிக்கு முதலில் வராது.

டகரம் டகர மெய்ககுபபின் வருமாயின (ට) என்னும எழுததை யொத தொலிககும. (உ-ம.) பட்டம். ට = tt hard.

டகரம் மொழியிடையிலும கடையிலும (ඩ) எனனும எழுததை யொத தொலிககும. (உ-ம்.) படம், காடு. ඩ = d.

டகரம் ணகர மெய்க்குப்பின் வருமாயின் (ඩ) என்னும் எழுத்தைப் பார்ககிலுஞ் சற்று வலிநதொலிக்கும. (உ-ம) பண்டம்.

*N.B.*—An English version of this Section will be found in Appendix B

த்

தகரம் மொழிமுதலில் (த) என்னும் எழுத்தை யொத்தொலிக்கும். (உ-ம்) தலை த = th hard.

த்தகரம் தகர மெய்க்குப்பின் வருமாயின் (த) என்னும் எழுத்தைப்பார்க்கிலுஞ் சற்று வலிந்து ஒலிக்கும். (உ-ம) பத்து.

தகரம் மொழியிடையிலும் கடையிலும் (த) என்னும் எழுத்தைப் பார்க்கிலுஞ் சற்று மெலிந்து ஒலிக்கும். (உ-ம்) அதனால்

தகரம் நகர மெய்க்குப்பின் வருமாயின் (ద) என்னும் எழுத்தை யொத்தொலிக்கும். (உ-ம்) மந்தன். ద = th soft.

ப்

பகரம் மொழிமுதலில் (ப) என்னும் எழுத்தை யொத்தொலிக்கும் (உ-ம்) படி. ప = p.

பகரம் டகர, பகர, றகர, மெய்களுக்குப்பின் வருமாயின் (ప) என்னும் எழுத்தைப்பார்க்கிலுஞ் சற்று வலிந்து ஒலிக்கும். (உ-ம்) நட்பு, அப்பம், பொற்பு.

பகரம் மொழியிடையிலுங் கடையிலும் (ప) என்னும் எழுத்தைப் பார்க்கிலுஞ் சற்று மெலிந்து ஒலிக்கும். (உ-ம்) கோபம், கபி.

பகரம் ணகர, மகர, னகர மெய்களுக்குப்பின் வருமாயின் (బ) என்னும் எழுத்தை யொத்தொலிக்கும். (உ-ம்) காண்பியும், உண்பி; அம்பலம், தம்பு, இன்பம், அன்பு. బ = b.

ற்

றகரம் மொழிக்குமுதலில் வராது.

றகரம் மொழியிடையிலும் கடையிலும் (ఱ) என்னும் எழுத்தை யொத்தொலிக்கும். (உ-ம்) அறிவேன், அறை. (ఱ = rr hard)

றகரம் றகரமெய்க்குப்பின் வரும்போது *tt* என்னும் எழுத்துகளை யொத்தொலிக்கும். (*tt* as in witty.) (உ-ம்) நேற்று.

றகரம் னகர மெய்க்குப்பின் வரும்போது (*dr*) என்னும் எழுத்துகளை யொத்தொலிக்கும். (*dr* as in *Andrew*) உ-ம். இன்று.

N. B.—வல்லின றகரமெய்யும், வல்லின றகர உயிர்மெய்யும் ஒன்றாகச் சேர்ந்து மொழிகளில் வரும்போது, ஒரேஎழுத்தைப்போல் உச்சரிக்கப் பிள்ளைகளைப் பழக்கிவரவேண்டும். உதாரணம்:—ற்ற = *ta*; ற்று = *tu*; மற்றவையும் இவ்வாறே.

N, B. Telugu letters are here made use of to represent the various sounds of the hard letters.

*கவ்னிப்பு:—தொன்று தொட்டு சமஸ்கிருத பாஷையிலிருந்தும், தற்காலத்தில் பல அன்னியநாட்டுப் பாஷைகளினின்றும் அனேகமொழிகள் தமிழிற்கலந்து வழங்கபபட்டுவருகின்றன. ஆகையால், மேலே காட்டப்பட்டிருக்கின்ற வல்லினத்தின் பலவித உச்சரிப்புகள் தமிழ் உச்சரிப்புக்கே யுரியனவென்றறிக.*

---

மொழிக்கு முதலில் வரும் எழுத்துகள்:—

*a*—உயிரெழுத்து பன்னிரண்டு:—அ, ஆ, இ, ஈ, உ, ஊ, எ, ஏ, ஐ, ஒ ஓ, ஔ.

*b*—உயிரோடு கூடிவரும் மெய்யெழுத்து பத்து:—க், ச், த், ப்; ங், ஞ், ந், ம்; ய், வ்.

*c*—உயிரோடுகூடி மொழிக்கு முதலில்வராத மெய்யெழுத்து எட்டு:-ட், ற்; ண், ன்; ர், ல், ழ், ள்.

மொழிக்குக் கடையில் வரும் எழுத்துகள்:—

*a*—உயிரெழுத்துப் பதினொன்று:—அ, ஆ, இ, ஈ, உ, ஊ, ஏ, ஐ, ஓ, ஔ.

*b*—மெய்யெழுத்து பதினொன்று:—ஞ், ண், ந், ம், ன்; ய், ர், ல், வ், ழ், ள்.

*c*—மொழிக்குக் கடையில் வராத எழுத்துகள்:—எ; க், ச், ட், த், ப், ற்; ங்.

---

Vowel-Consonants. உயிர்மெய்யெழுத்து—216.

அவை வருமாறு:—

| | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| க | கா | கி | கீ | கு | கூ | கெ | கே | கை | கொ | கோ | கௌ |
| ங | ஙா | ஙி | ஙீ | ஙு | ஙூ | ஙெ | ஙே | ஙை | ஙொ | ஙோ | ஙௌ |
| ச | சா | சி | சீ | சு | சூ | செ | சே | சை | சொ | சோ | சௌ |
| ஞ | ஞா | ஞி | ஞீ | ஞு | ஞூ | ஞெ | ஞே | ஞை | ஞொ | ஞோ | ஞௌ |
| ட | டா | டி | டீ | டு | டூ | டெ | டே | டை | டொ | டோ | டௌ |
| ண | ணா | ணி | ணீ | ணு | ணூ | ணெ | ணே | ணை | ணொ | ணோ | ணௌ |
| த | தா | தி | தீ | து | தூ | தெ | தே | தை | தொ | தோ | தௌ |
| ந | நா | நி | நீ | நு | நூ | நெ | நே | நை | நொ | நோ | நௌ |
| ப | பா | பி | பீ | பு | பூ | பெ | பே | பை | பொ | போ | பௌ |
| ம | மா | மி | மீ | மு | மூ | மெ | மே | மை | மொ | மோ | மௌ |
| ய | யா | யி | யீ | யு | யூ | யெ | யே | யை | யொ | யோ | யௌ |
| ர | ரா | ரி | ரீ | ரு | ரூ | ரெ | ரே | ரை | ரொ | ரோ | ரௌ |
| ல | லா | லி | லீ | லு | லூ | லெ | லே | லை | லொ | லோ | லௌ |
| வ | வா | வி | வீ | வு | வூ | வெ | வே | வை | வொ | வோ | வௌ |
| ழ | ழா | ழி | ழீ | ழு | ழூ | ழெ | ழே | ழை | ழொ | ழோ | ழௌ |
| ள | ளா | ளி | ளீ | ளு | ளூ | ளெ | ளே | ளை | ளொ | ளோ | ளௌ |
| ற | றா | றி | றீ | று | றூ | றெ | றே | றை | றொ | றோ | றௌ |
| ன | னா | னி | னீ | னு | னூ | னெ | னே | னை | னொ | னோ | னௌ |

# எழுத்திலக்கணங் கூறும் விதம்.

க

1. வினா:—இந்த அடையாளம் என்ன எழுத்து?

விடை:—வல்லினக் ககரக்குறில் உயிர்மெய்யெழுத்து.

2. வினா:—இதற்கு இலக்கணங் கூறுக

விடை:—வல்லினக் ககர (க்) மெய்யின்மேல், அகர (அ) குறில் உயிரேற (க்+அ) க என்றாயிற்று.

ணை

வினா:—இந்த அடையாளம் என்ன எழுத்து?

விடை:—மெல்லின டண்ணகர நெடில் உயிர்மெய்யெழுத்து.

வினா:—இதற்கு இலக்கணங் கூறுக

விடை:—மெல்லின டண்ணகர (ண்) மெய்யின்மேல் ஐகார (ஐ) நெடில் உயிரேற (ண்+ஐ) = ணை என்றாயிற்று.

யௌ

வினா:—இந்த அடையாளம் என்ன எழுத்து?

விடை:—இடையின யகர நெடில் உயிர்மெய்யெழுத்து.

வினா:—இதற்கு இலக்கணங் கூறுக

விடை:—இடையின யகர (ய்) மெய்யின்மேல் ஔகார (ஔ) நெடில் உயிரேற (ய்+ஔ) யௌ (யவ்) என்றாயிற்று.

கவனிப்பு:—மேற்கண்டவாறே மற்றெல்லா எழுத்துகளுக்கும் இலக்கணங் கூறப் பிள்ளைகளைப் பழக்கிவரவேண்டும்.

முற்றிற்று.

# APPENDIX A

# THE ANALYSIS OF TAMIL SENTENC

## (A TRANSLATION OF PAGES 1—11.)

A Sentence is the thought of a man completely expressed in words either in speech or in writing.

2. If a single word expresses a complete idea, it is a Sentence; as, (he) comes.

3. When several words joined together express a complete idea, they form a Sentence; as, He worships God.

*N. B.*—(*a*) In a Sentence, *Nouns* and *Verbs* are essential.
(*b*) Without a *Verb*, no sentence can be formed.

4. Sentences are of five kinds; *viz.*, Complete (sentence that has a finite verb), Dependent, Phrasial, Adverbial and Adjectival.

*N. B.*—A Sentence consisting of several clauses is called a Complex Sentence; the independent clause in it, is said to be the *Principal Sentence*.

5. A Complete Sentence is made up of a Subject and a Predicate with or without an Object. &c.

**Example.**

(*a*) *Rangaswamy* brought his book and gave it to Singaram.
(*b*) *Durairaj* came to school.

6. A Sentence made up of several words (Subject, Predicate &c.) and standing in the relation of a Noun either as a Subject or an Object to the Predicate of the Principal Sentence, is called a Dependent Sentence.

**Example.**

(*a*) It is not known, how he lost the money. (The Dependent Sentence "*how he lost the money*" stands in the relation of a subject to the Predicate "is not known.")

(*b*) He wishes that I should go home. (The Dependent Sentence "that I should go home" stands in the relation of an Object to the Predicate "wishes.")

7. A Phrase is a combination of several words with a Verbal Noun or an Infinitive at the end. It forms part of a Sentence standing as a Subject or an Object of its Predicate.

**Example:**

(*a*) Walking in the morning in one of the groves of Bangalore, will give health to the body. ("*Walking..... Bangalore*" stands as the Subject of the Verb "*will give.*")

(*b*) Iyapillai likes coming to school every day, both morning and evening, and learning his lessons. ("*coming......lessons*" stands as the Object of the verb "*likes.*")

(*c*) It is the desire of Duraisawmy to write every day in the school. ("*of.........school*" stands as the Subject to the Predicate "*is the desire.*")

(*d*) God wishes to save the penitent sinner. ("*To .....sinner*" stands as the Object of the Predicate "*wishes.*")

*N.B.*—(*a*) An Infinitive can be changed into a Verbal Noun and *vice versa* without affecting the meaning; *e. g.*, "To go to school is the desire of Duraisawmy" can be changed into "Going to school is the desire of Duraisawmy" (The Infinitive "*to go*" is changed into the Verbal Noun "*going*" and the meaning is not altered.)

(*b*) An Infinitive or an Infinitive Phrase in a sentence, where the Predicate is an Intransitive Verb, is only the Extension of the Predicate; as, Iyapillai comes every day to school to write. ("*To write*" is only an Extension of the Predicate "*comes.*")

8. An Adverbial Sentence is a combination of several words with a "Present Perfect Participle" or a "Verb in the Subjunctive Mood" at the end. It forms part of the Principal Sentence standing as the Extension of its Predicate.

**Example.**

(*a*) *Durgia* having started yesterday from Kaniambody and come to Bangalore saw Veeraragavaloo. (The Adverbial Sentence "*having..... Bangalore*" is only an Extension of the Predicate "*saw.*")

(*b*) If Nallaraj comes to school every day he will write well. (The Adverbial sentence "*if............daily*" is only an Extension of the Predicate "*will write.*")

9. An Adjectival Sentence is a combination of several words with a Participial Adjective at the end. It forms part of the Principal Sentence standing as an attribute to its Subject or Object.

**Example.**

The men who are most learned blessed the children who knew to read and write well. (The Adjectival Sentence "*who are most learned*" qualifies the subject "*men,*" and the Adjectival Sentence "*who knew to read and write well*" qualifies the Object "*children.*")

10. The Parts of a Sentence:—Subject, Predicate, Object, Attributive Adjuncts of the Subject or the Object and the Extension of the Predicate.

11. The Participial Adjective, the Adjective, the Adjectival Sentence and Nouns in the 6th case form the Attributes to the Subject or the Object.

*N.B.*—(*a*) If the Attributive word is divisible (derivative), it is a Participial Adjective. (*b*) If not, it is an Adjective.

12. The Participal Verbs, the Adverbs, the Adverbial Sentences, and Nouns in the 3rd, 4th, 5th and 7th Cases form the Extension of the Predicate.

*N.B.*—(*a*) Divisible (derivative) words, modifying a Verb, are called Participial Verbs; (*b*) If not, they are Adverbs.

---

### Method of Analysing Sentences.

13. Find out first, the Predicate; second, the Subject; third, the Object; fourth, the Attributes of the Subject; fifth, the Attributes of the Object; and sixth, the Extension of the Predicate.

*N.B.*—(*a*) Predicates are of two kinds, *viz.*, (i) Verbal Predicate and (ii) Predicate formed by the Copula (is, are &c.) and an Adjective, a Noun, or an Adjective and a Noun together.

(*b*) The latter are of three kinds, *viz.*, Finite Verb, Noun Predicate and Interrogative Predicate.

(*c*) Verbal Predicates are of three kinds, *viz.*, Finite Verb, Participial Verb and Participial Adjective.

(*d*) "பயனிலை" is a compound word made up of பயன்+நிலை, meaning "*the end of an idea.*"

(*e*) The Subject and the Object of a Predicate must always be a Noun or words equivalent to a Noun.

(*f*) The Subject is always in the first case.

(*g*) "எழுவாய்" is a compound word made up of எழு+வாய், meaning "*the source of an idea.*"

(*h*) The Object of a Verb must always be in the 2nd Case. Object means that to which something is done by the subject.

14. To find the Nominative (Subject), put the Interrogative Pronouns of the first case "எவன்" or "எவள்" &c., before the Predicate, and the answer is the Subject.

*N.B.*—The Subject comes either before or after the Predicate.

